உ

தேசிகன் றுணை.

# ஞான இரகசிய சிந்தாமணி

இஃது

இராஜநகர்

மகா-ள-ள-ஸ்ரீ கா. சிவதாணு பிள்ளையவர்கள்

குமாரர்

ராமசுப்பிரமணிய நாவல ரவர்களால்

இயற்றப்பட்டு,

சென்னை:

வெஸ்டு அண்டு கம்பெனியார்

அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] 1924 [அணு 8.



உ

# முகவுரை.

இக்காலத்து ஓர் நூல்செய்து வெளிப்படுத்தல் எளிதெனினும் அந்நூலாசிரியர் உன்னிய பயனடைதல் அரிதாயிருக்கின்றது. எனெனில், தமிழ் மரபினருள்ளும் பெரும்பான்மையோருந் தம் தாய்ப்பாஷையைப் போற்ருமையாலும், தமிழறிவுடையோர் சிறுபான்மையோரா யிருப்பதனுலும், தமிழ் நூல்கள் மலிந்து கிடப்பதனுலும் என்க. இத்துணை அசந்தர்ப்பங்க ளிருப்பினும் கற்றன பிறர்க்குதவுதல் முறையாகலானும், அமிழ்தினுமினிய தமிழைச் சிறப்புறச்செய்தல் கடமை யாகலானும் எளிதி லறிவரிய வேதாந்த நூல்களைக் கற்கப் புகுவோர்க்குப் பெரிதும் பயன்படுமாறு 'ஞான இரகசிய சிந்தாமணி' என்னும் இந்நூலை இயற்றியுள்ளேம். இதனைத் தமிழுலகம் கைக்கொள்ளுமாறு எல்லாம் வல்லகடவுள் அருள் புரிவாராக.

இங்ஙனம் :

ராமசுப்பிரமணிய நாவலர்.

தேசிகன்றுணை.

# ஞான இரகசிய சிந்தாமணி

---

## பிரஹ்ம லக்ஷணம்

“ அங்கிங்கெ னுதபடி யெங்குப்ர காசமா
யானந்த பூர்த்தி யாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடி யெல்லாம்
தங்கும்ப டிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாம னின்றதெது சமயகோ டிகளெல்லாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந்தொ டர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவ ழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ள தெதுமேல்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெது ”
அதுவே பிரஹ்மம். (தாயுமானவர்)

அது,

“ நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்

சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடரா யெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய்" நின்றிலகுகின்றது. (தாயுமானவர்)

"பெருவெளியாய் ஐம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய் மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்
குருவருளால் காட்டிடவு மன்பரைக்கோத்தற
விழுங்கி கொண்டப் பாலும்
தெரிவரிதாய்க் கலந்து" ஒளிருகின்றது.
(தாயுமானவர்)

"சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்
தன்மை நாமம்
ஏதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவற
நியக்கஞ் செய்யும் [நின்
சோதி"யாய் நிறைந்துள்ளது. (தாயுமானவர்)

---

## ஆன்ம லக்ஷணம்

பாலில் நெய் யுண்டு. ஆனல் மறைந்திருக்கிறது. அதுபோலவே சகல ஜந்துக்களிலும் பரப்பிரமத்தின் அம்ச மாகிய ஆத்மா இருக்கிறது. ஆனல், அது வெளிப்படையாய்க் காணப் படுகிறதில்லே.

ல — ஆ — சாமி



ஆத்மா அழிவில்லாதது. அது நித்தியமாயும், அளவற்றதாயும், அழிவற்றதாயு மிருக்கின்றது. ஆத்மா கொல்கிறதுமில்லை; கொல்லப்படுகிறதுமில்லை. ஆயுதங்களால் அதனை வெட்ட முடியாது. அக்கினி அதனை எரிக்காது. தண்ணீர் அதனை நனைக்காது. காற்று அதனை யுலர்த்தாது. ஆத்மா சர்வ வியாபி யாயும், நாச ரகிதமாயும் விளங்குகின்றது.

அப்பேர்க்கொத்த ஆத்மா சனிப்பது மில்லை; இறப்பது மில்லை. ஆனல் அவன் மாயையின் வல்லமையினுற் சரீரங்கடோறு மலைந்து கொண்டிருக்கிருன். ஒருவன் கிழிந்த வஸ்திரங்களைக் களைந்து விட்டு நல்லவஸ்திரங்களைத் தரித்துக்கொள்வது போல; ஆத்மாவும் காலக்கிரமத்தினுல் ஜீரணப்பட்ட சரீரங்களைக் களைந்து விட்டுப் புதிய சரீரங்களை எடுத்துக் கொள்கின்ருன். குடியானவ னெருவன் ஒரு வீட்டைவிட்டு மற்ருெரு வீட்டிற் குடி புகுவது போல, ஆத்மாவும் ஒரு சரீரத்தை விடுத்து வேருேர் சரீரத்துட் பிரவேசிக்கின்ருன். அவன் அவஸ்தாத்திரய சாக்ஷியாயும், பஞ்சகோச விலக்ஷணனுயும் விளங்குகின்ருன். ஜாக்கிர, சொற்பனங்கள் என்னு மவஸ்தைகளில் மனேவிருத்தியின் பாவத்தையும், சுஷுப்தியில் அதன் அபாவத்தையும் அறிகிருன். அவன் பிபீலிகாதிப் பிரம்ம பரியந்தமுள்ள சகல ஜீவர்களிடத்தும் அஹம் பதார்த்த சொரூபமாய் வசிக்கின்ருன்.

---

## ஜீவாத்மா பரமாத்மாக்களின் சம்பந்தம்

ஜீவாத்மா பொன்னைப் போலும், பரமாத்மா தங்கத்தைப் போலும் இருக்கின்றன. தங்கத்தை எத்தனை தடவைகள் புடமிட்டாலும் அது மாற்றிலோ எடையிலோ குறைவதில்லை. ஆனால் பொன் புடமிடப் புடமிட மாற்றிற்கூடி எடையிற் குறைந்து கொண்டே வந்து கடைசியாக அதுவுந் தங்கமாக மாறிவிடுகிறது. அதுபோலவே, ஜீவாத்மாவும் பொன்னைப் போலக் களங்க முடைத்தா யிருக்கின்றது. அதனுடைய களங் கங்களெல்லாம் என்றொழிகின்றனவோ அன்று பர மாத்மாவுடன் ஐக்கிய மாகின்றது.

மனம் நசித்தாலன்றி ஜீவ ஆத்மா பரமாத்மா வுடன் ஐக்கியமாகாது. இம் மனதே பந்தமென்று சொல்லப்படும். இதனாலேயே துவைத பேதங்களுண் டாகின்றன. இம்மனதே அகங்காரம், காமக்குரோதா திகளாக மாறிக்கொண்டு பெருந் துன்பத்தை விளைக் கின்றது. இவ்விதமான மனதை பிரஹ்ம நிஷ் டையில் லயிக்கச் செய்தால் துவைதப்பிராந்தி யொ ழிந்து பிரபஞ்சத் தோற்றுது பிரஹ்ம சாக்ஷாத் கார முண்டாகும்.

ஜீவன் மாயையால் மூடப்பட்டிருப்பதால் தேகாபி மானமும், காமக் குரோத லோப மோகாதி துர்க் குணங்களு முடையவனாய்த் தூல சரீரங்களின் மூல மாய்க் கருமங்களைச் செய்து கொண்டு வருகின்றான். பிறகு, தான் செய்த கரும பலன்களையு மனுபவித்துக்

கொண்டு மரணமான பின் சூட்சும சரீரத்துடன் சேர்ந்து சொர்க்க நரகங்களை யடைந்து அங்கும் சுக துக்கங்களை யனுபவிக்கின்றான். அப்பால், மறுபடியும் பூர்வ கர்ம சேஷத்திற்காக நானா யோனிகளிற் பிறந்து கொண்டும், இறந்து கொண்டு மிருக்கின்றான்.

பிரபஞ்ச சிருஷ்டி முதல் இது வரையிலும் சத கோடி ஜன்மங்களை யெடுத்தும் ஆசை யொழிக்காது பின்னும் பின்னும் ஈஷணாத்திரயங்களின் வசப் பட்டுக் கொண்டிருப்பதால் மானிடர்களுக்கு மோக்ஷ விசாரமே உண்டாகிறதில்லை. அன்றியும் அவர்கள் பந்தத்தின் கண் பிசினைப்போல வொட்டிக்கொண் டிருப்பதால் இன்னும் அனேக ஜன்மங்களை யெடுத் தாளவும் போகிறார்கள் என்பது திண்ணம். மாயா சாகரத்திலிருந்து தப்பித்துக் கொண்டு பரப்பிரமத் தில் ஐக்கியமாகும் வரையில் ஆத்மா ஏதோ ஒரு சரீரத்தை யாசிரயித்துக் கொண்டே யிருக்கும்.

---

## ஆத்மா ஒன்றே

ஒரு வத்தியி லெரிந்து கொண்டிருக்குந் தீபத்தி லிருந்து பற்பல வத்திகளைப் பற்ற வைத்தபோது அந்த ஒரே வத்தியிலுள்ள தீபமே எல்லா வத்திகளி லும் வியாபித்திருப்பதாகக் காண்கின்றோம். அது போல, ஒரே ஆத்மாதான் அனேக சரீரங்களில் வியாபித்து அநேக ஆத்மாக்களாய்க் காணப்படு கின்றது.

பிரபஞ்ச மெல்லா மொரே வாயுவே வியாபித் திருப்பினும், பிராண வாயுவென்றும், மலயமாருத மென்றும், சுழற்காற்றென்றும் பலவிதமான நாமங் களாகப் பேசப் படுவதுபோல், ஒரே ஆத்மாவே சகல ஜந்துக்களிலும் சமரஸமாய் வியாபித்திருப்பினும் அனேக ஆத்மாக்களாய்த் தோற்றுகின்றது.

மேற்கூறிய வாற்றால் ஆத்மா ஒன்றே என்பது தெள்ளிதிற் புலனாகின்றது. ஆனால் பிராந்தி வயப் பட்ட மானிடர்கள் ஆத்மாக்கள் பல உண்டென்று நினைத்துவாளா நாட்கழிக்கின்றனர். அன்றியும் இக் காரணத்தால் அனைவரிடத்தும் வேற்றுமை பாராட் டியே பேசுகின்றனர். தம் சரீரத்திற் குடியிருக்கும் ஆத்மாவேறு, அன்னியர் சரீரத்திற் குடியிருக்கும் ஆத்மாவேறு என்னும் விபரீத அபிப்பிராயத்தால் மானிடர்கள் வீண்வாதஞ் செய்வதிலும், சண்டை சச்சரவுகளைப் பெருக்குவதிலும் வாழ் நாட்களைச் செலவு செய்கின்றனர். சமஸ்த சரீரங்களிலுங் குடி யிருக்கும் ஆத்மா ஒன்றே என்றும், எதேனு மொரு சமயம் எல்லோரும் பரப்பிரம்மத்தில் ஐக்கியமாவார் கள் என்றும் உணர்ந்தவர்கள் இச்சென்மத்திலாவது அல்லது இன்னும் இரண்டொரு ஜன்மங்கள் கழிந்த பின்னராவது அல்லது அதற்கும் பின்னராவது தங் கள் முயற்சியின் வலிமையால் பிரம்மத்தில் ஐக்கிய மாவதற்குரியவர்கள் என்பது நிச்சயம். ஆகலின், பிராந்தி ஒழித்து எல்லாச் சரீரங்களிலும் வாசஞ் செய்யும் ஆத்மா ஒருவனே எனத் தெளியப்பெற்று

இகபர சுகங்களை வெறுத்துப் பிரமத்தோடைக்கிய மாவதற்கு வேண்டும் மார்க்கத்தில் நிற்பதே ஒவ்வொருவர்க்கும் உற்ற வேலை என்றறிக.

---

## மனமே மாயை

பிரம்மத்தோடைக்கிய மாவதற்கு மாயை யென்னும் திரை ஒழியுமட்டுஞ் சாத்தியப்படாது. மனமே பெருமாயை யாயிருக்கின்றது என்று பெரியோர்கள் சங்கையறக்கூறி யுள்ளார்கள். ஆகையால் மனமாயை யொழிந்தாலன்றிப் பிறப்பிறப்புக்கள் ஒழியாவென்பது திண்ணம். மனமே மாயை யென்பதற்கு திருமந்திரமே முதற் சான்ருய் நிற்கின்றது. அதாவது:—

“மனமன மெங்குண்டு மாயையு மங்குண்டு
மனமன மெங்கில்லை மாயையு மங்கில்லை”

என்பதாம்.

அன்றியும் கீழ்க்கண்ட தாயுமானவர் அமுதமொழிகள் கவனிக்கற்பாலன.

“மனமாயை தனையேவி னலடிமை சுகமாவ
தெப்படி சொலாய்” எனவும்,

“மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்து
வரும்” எனவும், அன்னர் கூறியது காண்க.

மனமே ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்கியமாவதற்குப் பெரிய தடையா யிருக்கின்றது. ஆகையினல் அதுவே எல்லோருக்குந் தீவிர சத்துருவா யிருக்கின்

றது. மனது எப்பொழுதுஞ் சலிக்குங் குணமுடைய தாகும். அது ஒரு விநாடிக்குள்ளே பற்பல விடயங் களைப்பற்றிச் சிந்தனைசெய்யும். அப்பால் அவைகளை யும் விட்டுப் பலவேறு விடயங்களிற்புகும். பிறகு அவைகளையும் நீக்கிவிட்டு வேறு சிந்தனையிலிருக்கும். இப்படியே க்ஷணநேரத்திற் குள்ளாகச் சகலவுலகங் களிலுஞ் சுற்றிக்கடைசியில் பாழாய் முடியும். நல்ல காரியங்கள் என்றும் கெட்ட காரியங்க ளென்றும் வேற்றுமைப் படுத்தாது சகல விஷயங்களிலும் ஓடும் இயல்புடையதான மனம் கட்டுப்பட வேண்டும். இல்லையேல் அநேககோடி ஜன்மங்களை எடுக்கவேண்டி வரும். ஆனால் அப்பேர்க்கொத்த மனதை நசிக்கச் செய்வது எளிதான காரியமல்ல.

"மனதைக் கட்டவறியாமலே வாடினேன்" எனவும்,

"ஆடிய கறங்குபோல் ஓடியுழல் சிந்தையை யடக்கி
யொரு கணமேனும் யான்காணிலேன் றிருவருளை"

எனவும்,

"சொல்லானதிற் சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டி யாட்டித்
தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்ப மொன்றிற்
றொடுக்குந் தொடுத்த ழிக்கும்
பொல்லாத வாதனை யெனுஞ்சத்த பூமியிடை
போந்துதலை சுற்றி யாடும்
புருஷனி லடங்காத பூவைபோற் றானே
புறம்போந்து சஞ்ச ரிக்கும்

கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடும்
காணாது கேட்க வெல்லாம்
கண்டதாக் காட்டியே யணுவாச் சுருக்கிடும்
கபடநாடக சாலமோ
எல்லாமும் வலிதிந்த மனமாயை யேழையா
மென்னல் அடக்க வசமோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே" எனவும்,
தாயுமானவர் கூறியுள்ளார்.

இத்தகைய வல்லமை பெற்ற மனத்தினை மாய்ப்பது எளிதல்லவாயினும் இடைவிடா முயற்சியால் மனம் நாசமடையும்படி செய்யலா மென்பது நிச்சய மாகும்.

அந்தக்கரண விருத்தியும் சிதாபாச மென்னும் பலமுங் கூடிய பரிணாமமே மனமென்று சொல்லப் படும். இவ்வுண்மையை,

"விருத்தியும் பலமுங்கூடும் விகாரமே மன
மென்பார்கள்" என்பதனை லறிக. (கைவல்லியம்.)

இந்த மனம் சத்துவம், இராஜசு, தமசு என்னும் மூன்று குணங்களை யுடைத்தா யிருக்கின்றது. இவற்றுள் சத்துவகுண மாத்திரமா யிருக்கும் மனதிற்கு அருவ மனமென்றும், இராஜோ தமோ குணங்களோடு கூடியதற்கு உருவமனம் என்றும் சொல்வார்கள். ஆனல், சத்துவமே மனதின் உண்மையான சொரூப மாகும். இராஜோ தமோ குணங்களை யுடைய மனது

சலனமும் அஞ்ஞானமும் பொருந்தியுள்ள தாகை யால், இவ்விரு குணங்களும் நீங்கிய மட்டிலேயே மாயையாகிய மனம் ஒழிந்ததாகின்றது. சேடித்த சத்துவ குணமன முண்டெனிலோ, அது ஒழிந்ததற் குச் சமானமேயாகும். இந்தச் சத்துவ குணத்தினை யுடைய மனமும் பின்னர் விதேக முத்தியில் நாசமாகு மென்பது வேதாந்த உண்மை.

இம்மனம் பல எண்ணங்களை எண்ணிக்கொண் டே யிருக்கும். இவ்வெண்ணங்க ளெல்லாம் நாபி ஸ்தானத்திலேயே இருந்துண்டாகின்றன. எப்பொ ழுது சங்கற்பங்க ளெல்லாம் ஒழிகின்றனவோ அப் பொழுதே பிரம்மானந்த மூதயமாகும். நானாவித சங் கற்பங்களால் மனம் ஓர் நிலையில் நில்லாது சஞ்சலத் தை யுண்டாக்குகின்றது. மனத்தை ஆசாபாசங் களில் விடாது அடக்கினல் தெளிவடையும். ஆத்மா வில் மனதைச் சேர்ப்பித்தால் சங்கற்ப விகற்பங்க ளெல்லாம் அற்றுவிடும்.

---

## பூர்வ வாசனை

முற்சென்ம வாசனையால் மனந்திடப்படாமலும், அஞ்ஞானத்திற் கிடமாயு மிருக்கின்றது. இப்பூர்வ வாசனை யொழியு மட்டு மனம் ஒடுங்கவேமாட்டாது. கழிந்த சென்மங்களி லெல்லாம் வீணே சம்சார இன் பத்திற் கேதுவான உலகபோகங்களை யிச்சித்துக் காலம் போக்கிக் கொண்டிருந்ததால் இச்சென்மத்தி

லும் மனமானது திடப்படாமற் சுழன்று கொண்டே வருகின்றது. அநேக ஜன்மங்களாய் நிழலைப்போல வே மனமும் நம்மைத் தொடர்ந்து கொண்டிருக்கின்றது. இச்சென்மத்திலும் முற்சென்மங்களிற் போல வே சம்சார துன்பங்களை யனுபவிக்கும்படி மனமேவுகின்றது. முற்சென்ம வாசனையின் வயப்பட்டுப் பெரும்புயலி லகப்பட்ட துரும்புபோல நாம் விழித்துக்கொண் டிருக்கிறோம். இப்பூர்வ வாசனை சுத்த வாசனையெனவும் அசுத்த வாசனையெனவு மிருவகைத்தாயிருக்கிறது. இவற்றுள் முற்சென்ம்ங்களிலெந்த வாசனை நம்மை முக்கியமாகப் பற்றிக்கொண் டிருந்ததோ அதுவே இச்சென்மத்திலும் உண்டாகும். இதைப் பற்றி ஞானவாசிட்டங் கூறுவதறிக.

"முற்பிறப்பின் வாதனையின் வபத்தி னின்றேன்
முயற்சியிலே னென்செய்கேன் முனிவ னென்ன
வற்புதனே தன்வருத்த முயற்சி யாலே
யடையலாம் பிரமபத மயல்வே றின்று
சொற்பயில்வா தனைத்திரளின் பேதஞ் சொல்லிற்
சுபமசுப மெனவிரண்டாஞ் சொன்னவற்றி
லற்பமுறு பவந்தோறுந் தொடர்ந்து வந்த
வாதனையே ததுவொன்றே மருவி நிற்கும்.
(ஞானவாசிட்டம்.)

மேற்சொல்லிய வாசனைகளுள் சுத்தவாசனை மோக்ஷத்திற் கேதுவாயும், அசுத்த வாசனை பந்தத்திற் கேதுவாயும் இருக்கின்றன. விடயவாசனை யொ

ழிந்தாலன்றி மனம் சுத்தத் தன்மையை யடையாது என்பது நிச்சயம். ஆகலின் சுத்தவாசனையிலேயே பழகல்வேண்டும். சிரமப்பட்டாயினும் விடயவாசனையை விட்டொழிதலே தகுதியாகும். சுத்த வாசனையின் முயற்சியால் பரமபத சாம்ராஜ்யம் சித்தியாகும்.

---

## மாயை இல்லாதது

ஆனல், அச்சர்வசாம்ராஜ்ய மடையவொட்டாமற் றடுப்பது மாயை யென்னும் திரையாம். இம்மாயை யநாதி காலந்தொட்டே தோன்றிக் கொண்டிருக்கின்ற தெனினும் உண்மையாக நோக்குங்கால் மாயை என்பது மித்தையென்வே புலப்படும். இவ்வுடல் யானென்றும், இந்தப் பிரபஞ்சம் மெய்யென்றும் விபரீதமாய் நினைப்பதே மாயையாம். இம்மாயையானது எப்படி வந்ததென்று அறிந்தவர்கள் இல்லை. இத்தகைய மாயை என் உண்டாயிற் றென்றால், நாமார்? இச்சகத்தேது? இவ்வுலக சம்பந்தம் நமக்குளதாமோ? என்னும் விசாரம் புத்தியின்கண் ணில்லாமை யானென்க. இதனே,

“ அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா
லவாச்சிய வடிவாகும்
இதுதனக்குள துடலியா னுலகுமெய்
யெனுமவ ருடையோர்கள்
கதையிலாத பொய் வந்ததிப் படியென்று
கண்டபே ரிலைமைந்தா

விதன மாயையேன் வந்ததென்றூற் புத்தி
விசாரமற் றதனுலே." (கைவல்யம்.)

என்பதனுல் அறிக.

ஆகலின் இம்மித்தையான மாயையைக் கெடுத்தல் வேண்டும். மாயை மித்தை யென்பதை

"அண்டபகி ரண்டமு மாயாவி காரமே
யம்மாயை யில்லாமையே
ஆமெனவு மறிவு மூண்டு." (தாயுமானவ்ர்.)

எனவும்,

"தேன்முகம் பிலிற்றும் பைந்தாட் செய்யபங்
கயத்தின் மேவும்
நான்முகத் தேவே நின்னு ளுட்டிய
வகில மாயை
கான்முயற் கொம்பே யென்கோ கானலம்
புனலே யென்கோ
வான்முக முளரி யென்கோ மற்றென்கோ
விளம்பல் வேண்டும்." (தாயுமானவர்)

எனவும்,

"நனிமெய்யாய் மாயையிலதென் றிவ்வாறு நாடுவாய்"

எனவும், (ஞானவாசிட்டம்.)

"பனிமாயை யில்லையென வென்சொல்லாலே
பழுதில்லா வறுதியுறப் பற்றிநிற்பாய்"
(ஞானவாசிட்டம்.)

எனவும் வருவனவற்று னறிக.

இம்மாயையைக் கெடுத்தா லொழிய பிறப்பு இறப்புக்களெனுந் துன்பமொழியாது. அஞ்ஞான மாகிய மாயை யொழிதற்கு ஞானமாகிய ஒளியே காரணமாகும். இடைபரூத விசாரத்தால் உலகமாயை யானது கெட்டுவிடும். ஆனல்,

"மாயையெனும் திரையை நீக்கி நின்னை
யாரறிய வல்லார்" (தாயுமானவர்.)

என்றபடி இம்மாயை நீக்குவது கஷ்டமே யாம். எனினும்,

"இம்பரி னஞ்சை நஞ்சால் இரும்பினை
யிரும்பா லெய்யும்
அம்பினை யம்பாற் பற்றும் அழுக்கினை
யழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயைதன்னை மாயையான்
மாய்ப்பர் பின்னைத்
தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு
தடிபோற் போமே." (கைவல்லியம்.)

என்றாற்போல மாயையை மாயையால் வெல்லலாம் என வறியக் கிடக்கின்றது. அன்றியும்,

"எய்கணைகள் கணையாலே நஞ்சை நஞ்சால்,
துன்னுபகை
பகையாலே தீது தீதாற் றுடைப்பது போல
வித்தைதனைத்
துடைத்தல் வேண்டும்" என ஞானவாசிட்டங் கூறுகின்றது.

ஆதலின், விடாமுயற்சியோடு மாயையாம் திரையை நீக்கல்வேண்டும். மாயை எப்பொழுது நீங்கிவிடுமோ அப்பொழுதே ஆத்மா னுத்மவிவேக முண்டாம். அவ்விவேகத்தால் நாம் பிரஹ்மரூபமே என்னும் திடநிச்சய முதயமாகும்.

---

## மகளிரே சகல துன்பத்திற்குங் காரணம்.

மிகுந்த மாயையைக் கொடுக்கின்றவர்கள் மகளிரேயாம். இவ்வுலக மனைத்தும் மகளிர் வலைக்குட்பட்டுத் தவிக்கின்றன. மகளிர் மாயையிற் சிக்குண்டு அதினின்றும் இரட்சிப்படைய வழியறியாது ஜீவர்களல்லோருந் திகைக்கின்றனர்.

"பெண்ணுகி வந்தொரு மாயப்
பிசாசம் பிடித்திட்டென்னைக்
கண்ணுல் வெருட்டி முலையான்
மயக்கிக் கடிதடத்துப்
புண்ணுங் குழியிடைத்தள்ளி யென்
போதப்பொருள் பறிக்க
வெண்ணுதுனை மறந்தேன்
இறைவா கச்சியே கம்பனே."

(பட்டினத்தடிகள்)

எனறபடி அல்லும் பகலும் மாதர் வசப்பட்டுவாழ் நாளை வீணுகக்கழிக்கின்றனர்.

மாதர்கள் காரணத்தால் கரை காணுச் சம்சார சாகரம் வந்துறுகின்றது. மகளிர்மேல் வைத்த

ஆசை தடுப்பரும் துன்பத்தை விளைவிப்பதாகின்றது. மகளிராசை யொழியுமட்டும் உலகந்தோன்றிக் கொண்டே யிருக்கும். மாதராது மயக்கத்தால் ஆதி முதல் அந்தம் வரையிலுந்துன்பமே யன்றி ஒரு விநாடிப் பொழுதேனும் இன்பத்திறகு வழியில்லை என்பது நிச்சயம். எப்பொழுது மாதரை விழைதலில்லையோ அப்பொழுதே சகல இன்பமுமுண்டாம். இல்லையேல் எல்லையற்ற துன்பத்திற் கிலக்காகிப் பிறப்பிறப்புக்களை யடைவது திண்ணம்.

“ கல்லையுற்ற கருத்தினர் கார்நிறத்
தல்லையொத்த குழலினர் ஆசையால்
எல்லையற்ற மயல்கொள வோவெழில்
தில்லை யிற்றிக ழுந்திருப் பாதனே.”

(தாயுமானவர்)

என்பதால் பெண்ணாசை நீக்காவழி யுய்வில்லை யென்றறிக.

அன்றியும், பெண்களனைவரும் கூற்றுக் கொப்பெனவே மகான்கள் கூறுகின்றனர்.

“காதென்று மூக்கென்று கண்ணென்று
காட்டியென் கண்ணெதிரே
மாதென்று சொல்லிவரு மாயைதன்னை
மறலிவிட்ட
தூதென் றெண்ணமற் சுகமென்று
நாடுமித் தூர்ப்புத்தியை

யாதென் றெடுத்துரைப்பே
னிறைவா கச்சியேகம்பனே."

(பட்டினத்தடிகள்)

என்பதனு லவ்வுண்மை நன்கறிக.

ஆசை மயக்கி லாழ்ந்து கிடப்போர்க்கு மட்டும் மகளிர் அழகுடையா ரெனத் தோன்றுமே யன்றி உண்மை யறிந்தவர்கட்கு அங்ஙனம் தோன்ருது. ஆழ்ந்தாலோசிக்கின் கைகால் முதலிய பல உறுப்புக் களா லாக்கப்பட்டுப் பொம்மைக ளாடுவதுபோல் அங்குமிங்குந் திரிந்துகொண்டு, காணு மானிடர்களை யெல்லாம் நசிப்பிக்கு மெண்ணமுடைய விகிருதிருபங் களே மாதர்க ளாவார்கள். அவர்கள் தம் உறுப்புக்களை யெல்லாம் பிரித்துநோக்கின் அங்கொன்றுங் காண் பதற் கில்லாமலே முடியும். ஆனல் அவ்வுறுப்புக் கள் பொருந்தி யிருக்குமளவில் அவ்வுருவம் மாயை யைக் கொடுக்கும் பொம்மையாகி விடுகின்றது. ஆத லின், அழுக்கு நிறைந்த குழலினையும், இரண்டொரு நாட்கள் முழுகாவிடில் சகித்தற்கரிய நாற்றத்தைக் கொடுக்கு முடலினையும் உடைய உருவங்களுக் காசைப்பட்டு மாய்வதைவிட இறந்துவிடுவ தன்ரே நலம்! மாதர்களைக் கண்டாசை யுறுவதற்கு அவர் களிடத்து விசேஷமாய் அனுபவித்தற் கென்ன வுண் டென்று கூடத் தோன்றவில்லை. அவர்கள் ஸ்தனங் களைக் கண்டிச்சப்பதாயின் அவைகள் அடையும் கதி யையும் கீழ்க் கண்டவாறறிக.

"மேருவின் குவட்டின் வீழும் விரிதிரைக்
கங்கை நீர்போ
லாரமுற் றிலங்குகின்ற வணியிழை
மடவார் கொங்கை
யூரயன் மயானந் தன்னிலுற்றபோ
துருண்டைச் சோற்றின்
நேருறு கவளம்போல நிரைநிரை
நாய்க டெய்க்கும்." (ஞானவாசிட்டம்.)

என்றபடி சவமாயின பின்னர் மாதர்களுடைய ஸ்தனங்களை நாய்கள் வரிசை வரிசையாய் வந்து சந்தோஷத்துடன் புசித்துப்போகும். ஆதலின், அவர்கள் தம் ஸ்தனங்களைக் கண்டிச்சப்பது அறியாத தன்மையா மென்க.

இஃதன்றி மாதர்கள் தம் நிதம்பத்தைக் கண்டிச்சிப்பதாயின் அதன் குணத்தையுங் கீழ்க்கண்டவா றறிக. அவர்கள் நிதம்பமானது

"தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயும்
காமப்பாழி கருவிளை கழனி
தூமைக் கடைவழி தொளைபெறு வாசல்
எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமம் கழிக்கு மறைவிடம்
நச்சிக் காமுக னுய்த்தா னென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயல்
திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி

புண்ணிது வென்று புடவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியாப் நுண்ணியர் போம்வழி
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சொரிந் திழியும் வாசற் கருகே
சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாசல்.''

(பட்டினத்தடிகள்)

இங்ஙனம் புத்தியால் யூகித் துணர்பவர்கள் ஸ்திரீகளுடைய நிதம்பத்தையு மிச்சிக்க மாட்டார்கள் என்பது திண்ணம். அன்றியும் ஸ்தனங்கள் பூர்வம் மாதாவின் பாலை உட்கொண்ட விடமாகும். வாலிப பிராயத்தில் மனிதர் இச்சித்துச் செல்கின்ற நிதம்பமானது அவர்கள் மாதாவின் கருப்பத்தினின்றும் வெளிவந்த வழியாகும். இதனை யுணர்ந்தேனும் மகளிராசையை விட்டொழிக்க மானிடர்கள் கடமைப் பட்டுள்ளார்கள்.

சிருஷ்டி காலம் முதற்கொண்டு இதுவரையிலும் சீவர்கள் அநேக ஜன்மங்களை யெடுத்துள்ளார்க ளென்பது மறுக்கொணாததே யன்றோ! அங்ஙனமாயின், நாமும் இதுவரையில் எத்தனையோ சென்மங்களை எடுத் தாண்டுள்ளோம். அவற்றுள் பெண்ணுய்ப் பிறந்த ஜன்மங்களு மெண்ணற் கரியனவே யென்ப

தும் மிகை யாகாதன்றே! ஆயின் ஆடவர்கள் பெண்களாயும், பெண்களாடவர்களாயும் எத்தனையோ தடவைகள் பிறந்துள்ளார்கள் என்பது நிரூபணமாகின்றது. அவ்வாறிருந்தும் ஆடவர்கள் பெண்களை யிச்சிப்பது முறையன்றன்றே! ஆராயப்புகின் ஆன்மாவானது கர்மானுசாரணம் ஆடவர் சரீரத்துள்ளும் மகளிர் சரீரத்துள்ளும் புகுகின்றது. ஆதலால் ஆணென்றும் பெண்ணென்றும் விவகரிப்பது பொய்யென்றும், ஆன்மா ஒன்றே மெய்யென்றும் தோன்றுகின்றது. ஆகவே, தம் சரீரத்தில் நிவசிக்கும் ஆத்மாவே மகளிர் மெய்யினுள்ளும் வசிக்கிறனென்றறிந்து அவர்களை விலக்குவதே முறையாம்.

ஒரு ஆடவன் மாதொருவளைத் தன்னுயிரினும் பன்படங்கதிகமாக விச்சித்து அவளுடனேயே சில காலம் வசித்து வந்தபோதிலும், அவள் இறந்த பின் அடுத்துக் கூடச் செல்லமாட்டான் என்பது அனுபவமன்றே! ஆதலின் மாதர்கள்மீது வைத்திருக்குமாசை அவர்கள் உயிர் போய் விட்டால் நசித்து விடுகின்றது. அப்பால் ஜீவனுடிருக்கு மின்னொருமாதை யிச்சிக்கின்றான். அவளும் மாண்டுபோனல் அவளையுந் தீண்டாது வேறொருவளைத் தேடுகின்றான். இவ்விதமே அவன் வாழ்நாளை அவமேகழித்துச் செல்கின்றான். கடைசியாக அவனு மிறந்து விடுகின்றான். அதற்கப்பால் அவன் அனுபவிப்பது நரகமேயாம். ஆதலால், இம்மையில் காமத் தீயையு மறுமையில் நரகத் தீயையு மூட்டுகின்ற மங்ளிரை

இச்சிப்பது போன்ற ஈனத்தொழில் வேறின்றென்பது எஞ்ஞான்று முண்மையே யன்றே !

மகளிர் விருப்பத்தை விட்டொழியாத மானிடனால் உலகிற்கும் யாதொரு பிரயோஜனமு மில்லை; அவனுங் கெட்டுவிடுகின்றான். ஏனெனில், அவன் ஆசை வயப்பட்டதால் முக்தி யடையு மார்க்கத்தைத் தேடுகின்றிலன். அப்பேர்க்கொத்தவன் மனைவி மக்கட்காகப் பொருள்தேடி யத்தியத்தில் வீணாகக் கெட்டுவிடுகின்றான்.

“ மனைவியு மகரும் பொன்னு
மமதைசெய் தமுதம் போல
நினைவினு னேயஞ் செய்து
நீணிலத் துள்ள வெல்லாம்
அனையவர்க் காகச் செய்வ
ரருத்திக ளான வெல்லாம்
வினையுற முடியுங் காலை
விடங்களின் மயக்கஞ் செய்யும் ”

(ஞானவாசிட்டம்)

என்றபடி இன்பத்தைக் கொடுப்பதுபோல் இருந்து கடைசியில் அவனைக் கெடுத்துவிடும். அன்றியும்,

“ பாரிமை யுடையோன் யாவ
னவனுக்கே பற்றும் போகம்
நாரிமை யில்லா தாற்குப்
போகத்தி னலமெங் குண்டாம்

காரிகை தன்னை நீங்கிற்
கருத்துறு சகத்து நீங்கும்
பேரியல சகத்து நீங்கிற்
பிரிவில்பே ரின்ப முண்டாம்"

(ஞானவாசிட்டம்)

என்றபடி மாதர்களின் வயப்பட்டவனுக்கே சகல பற்றுக்களு முளவாம். அல்லாதாற்கு யாதொரு போகத்திலும் இச்சையில்லை. ஆதலால் போகமு மில்லை. மாதர்கள் மீது உள்ள ஆசையை விட்டொழிந்தால் உலக பந்தமும் போம். ஆகவே நாம மாத்திரமான உலக நீங்குமிடத்துப் பேரானந்த முதயமாம். ஆகலின், மயக்கத்தைக் கொடுக்கும் மகளிராசையை விட்டொழிந்து பேரானந்தத்தை யெய்த முயற்சிப்பதே கோடிக் கணக்காய் வரும் சன்மங்களை யகற்றுவதற் குகந்த வழியென்றறிக.

---

## சாஸ்திர ஆராய்ச்சி அவசியம்.

நாம் இன்னாள் வரையில் கோடானு கோடி சென்மங்களை யெடுத்து, அவ்வச் சன்மங்களில் புண்ணிய பாபங்களின் வயப்பட்டு ஓர் கரை சேராது வருந்துகின்றோம். நாம் எடுத்த சென்மங்களிலெல்லாம் பலவித துன்பங்களை யனுபவித்தோம். சிற்சில சென்மங்களில் முழுமூடர்களாகவு மிருந்திருக்கவேண்டும். ஏனெனில், அகஸ்மாத்தாக ஒருவனுக்கு ஞானம் சித்திப்பதில்லை. அங்ஙனம் சித்திப்பதாயின், அவன் முற்சென்மங்களில் எவ்வளவோ கஷ்டப்பட்டிருக்க

வேண்டும். நாம் எண்ணற்ற சென்மங்கள் எடுத்திருந்தும் பேரின்பவீட்டை யடைவதற்கு இப்பொழுதேனும் யோக்கியம் உடையவர்களா யிருக்கின்றேமா வெனில் அதுவுமில்லை.

"அருளுடைய பரமென்றே வன்று தானே
யானுளன்" (தாயுமானவர்)

என்றபடி அப்பரம் பொருள் என்று முதல் உண்டோ அந்நாள் முதல் நாமுமிருக்கிறே மென்றும், ஆனல் சரீரங்கள் மட்டும் மாறி மாறி வருகின்றனவே யன்றி நமக்குப் பேதமே தேனுமில்லை யென்றும் நாமறிகிறேம். எனவே, இத்தனை கோடி ஜென்மங்களெடுத்தும் நாம் லட்சத்திலோர் பங்குகூடப் பக்குவத்தை யடையவில்லை யெனில், முன்னெடுத்த கோடி சென்மங்களினும் லட்சமடங் கதிகமான சென்மங்களை எடுத்தாலொழிய நமக்கு முத்தி சேராதென்பது அறியக் கிடக்கின்றது. அதாவது,நாம் முற்சென்மங்களிற் போலவே இச்சென்மத்திலுங் காலந்தள்ளி விட்டோமானல், இதற்குமுன் எத்தனை சென்மங்க ளெடுத்தோமோ அதனிலும் லட்சமடங்கான ஜென்மங்களையெடுக்க வேண்டிவரும். ஆனல், இது பொதுவாகக் கூறப்பட்டதே யன்றி வேறல்ல. ஏனெனில், கழிந்த ஜென்மங்களில் நற்குணத்தை யுடையவனு யிருந்தவன் இச்சென்மத்தில் சகவாஸ தோஷத்தினல் அதோகதி யடைவதும், மூடனெருவன் இடைவிடா முயற்சியாலும் வைராக்யத்தாலும் நிகழுஞ் சென்மத்தில் ஞானமடைவதும், அப்பாலோர் சென்மத்தில்

பூர்ண ஞானமெய்தி வீடடைதலும் நடைபெறு மாறுளதால் என்க. ஆனல், ஈண்டவ்வாறு கூறப் பட்ட தெதற்கோவெனில், முற்செனமங்களிற்போல் நாம் இச்செனமத்தையும் வீணய்க்கழித்து விட்டோ மானல் இன்னும் எண்ணற்கரிய ஜெனமங்களை யெடுக்கவேண்டி வருமென்பதை மட்டும் விளக்குவ தற்காம். நாம் இச் செனமத்திலாகிலும் விடா முயற்சியோ டுழைக்கா விட்டால், வீணே பல ஜன் மங்களை யெடுப்பதோடு துன்பங்களையும் பெருக்குதல் திண்ணம்.

வருகின்ற செனமங்க ளனைத்துந் தொலைத்து முக்தி பெறுவதற்குச் சாதனமாயுள்ளது சாஸ்திரிய முயற்சியே யாகும். சாஸ்திர ஆராய்ச்சியினல் விஷயங் களை நன்கறியவும்,அதன்படி ஒழுகவுஞ் செய்யலாகும்.

இராகவகே ளிப்பவத்திலென்று மெல்லா
மியல்புறு நன் முயற்சியின லியார்க்கு மெய்து
மாகலை நன் னூன்முயற்சி யொன்று மொன்று
வருநூலி லாமுயற்சி மற்றி வற்றின்
சோக மின்னூல் வழிவீடாம் நூலிலாமை
துன்பமாம் சைசவத்தின் றொடரு மின்னூன்
மோகமினல் லோர்கூட்டம் குணங்க ளாலே
முயற்சியுறு பெரியோர்க்கு முத்தி பேறும்.

(ஞானவாசிட்டம்)

என்றபடி சாஸ்திர ஆராய்ச்சியின் குணம் கூறப்பட் டிருக்கிறது.

பற்பல சாஸ்திரங்களை யாராயுங்கால், நமக்குள வாகும் ஐயங்கள் பெரும்பான்மையு மொழிகின்றன. அன்றியும் வைராக்கியமும், உலக போகத்தின்கண் வெறுப்பு முண்டாகி நாம் நம்வரையில் பாதுகாத்துக் கொள்ளச் சக்தியுடையவர்க ளாகின்றோம். நீடித்த காலம் சாஸ்திர ஆராய்ச்சி செய்யின் அது சர்வமும் பொய்யெனத் தேர்ந்து முக்தியடையும் வழியில் முயற்சி செய்யக் காரணமாகும். முதன் முதலாகச் சாஸ்திர ஆராய்ச்சி செய்பவர்கட்கு இக் குணங்க ளுண்டாகாவிட்டாலும், நீடித்த கால பழக்கத்தினு லும், ஜன்மந்தோறுஞ் செய்யா நின்ற முயற்சியாலு முண்டாவது நிச்சயமாகும்.

“ ஊனமிலா ஞான நூல் விசாரத்தாலே
உயர்வீடு நண்ணுமென லுண்மை யன்றோ ”
(ஞானவாசிட்டம்)

என்றபடி ஞானநூல் ஆராய்ச்சி யானது முக்தியைக் கூட்டுவிக்கு மென்பது திண்ணமேயாம். ஆதலால், ஆத்ம ஞான சாஸ்திரங்களிலேயே பழகவேண்டும். அஞ்ஞான நிவிர்த்திக்குக் காரணமாகிய நூல்கள் நமக்கு உதவி புரிவனவாம்.

ஆனல் இச்சன்மத்திலுங் கூடச் சிலர்க்குச் சாஸ்திர ஆராய்ச்சியிற் சிறிதேனும் விருப்பமிருப் பதைக் காணேம். ஆதலால் அவர்கள் தம் அஞ் ஞானத்தைப் போக்கும் பொருட்டுழைக்காது வீணுக மாய்கின்றனர். இப்படியே நாம் ஜன்மங்கள் முழு

தும் போக்கிவிட்டால் நம் கதிதான் என்னே! என்று தான் நாம் இப்பவ சாகரத்தினின்றும் கரைசேரப் போகிறோம். நாம் சம்சார துன்பத்தினின்றும் விடு பட வேண்டுமானல் அதற்குச் சகாயமான ஞானநூல் களைச் ,சதா ஆராய்ச்சி செய்யக் கடமைப் பட்டுள் ளோம். தினேதினே நாம் செய்து வரும் சாஸ்தி ராப்பியாசம் முடிவில் நமக்கு ஓர் அரிய நண்பனு யுருக்கொண்டு நம்மைக் கரையேற்று மென்பதை நினைத்தொழுக ஒவ்வொரு வருங் கடமைப்பட் டுள்ளார்கள்.

---

## ஆன்ம விசாரணை.

ஆன்மஞான சாஸ்திரங்களை யாராய்ச்சி செய்யுங் கால் ஆன்மா னன்மவிவேகமும் சிறிது சிறிதாக உண் டாகும். ஆன்மா நிலைபெற்றது என்றும் ஏனைய வஸ்துக்களாகிய அனைத்தும் அழியத்தக்கன வென் றும் நிச்சயமாயறிவது ஆன்மா னன்மவிவேக மெனப் படும். எவ்வஸ்துவிற்கு நாம ரூபங்களுண்டோ அது அழிவது நிச்சயமேயாகும். ஆதலின், இவ்வுலகமும் நிச்சயமாக அழியக்கூடியது என்பது சொல்லாமலே விளங்கும். சகலமும் ஆத்ம சொரூப மென்றும் ஆத்மா அழியாத வஸ்து வென்றும் அறிந்தவனே விவேகியாவான் என்பது மேலோர்கள் அபிப்பிராயம். நான் யாரென்றும் எப்படிப்பட்டவ னென்றும், இவ் வுலகம் வந்தவாறென்ன வென்றும், அது எனக்குச்

சொந்தமா வென்றும் தடைபருது விசாரணை செய்பவன் அஞ்ஞான மென்னும் இருளில் இருந்து வெளிப்படுகிருன்.

இத்தேகமானது நமக்கு ஒருவிதத்திலும் சொந்தமன்றென்று நினைத்துத் தேகாபிமானத்தையும் விடுத்து இவ்வுலகம் பொய்யென்றும் அனைத்தும் பிரம்மமயமே என்றும் திடமுடையவனுய் உலகத்தின் பேரிலுள்ள அபிமானத்தையும் கெடுத்துச்சதா ஆன்ம விசாரணையில் இருக்கப்பட்டவன் எல்லோராலும் பூஜிக்கப்படுகின்ருன்.

எப்பொழுது மான்ம விசாரணைசெய்து கொண்டிருக்கின்றவன் இவ்வுலகம் உண்மை யன்றென்று நிச்சயமா யறிகின்ருன். ஆனல் அவன் இவ்வுலகத்தை விட்டவனுமல்லன்; விடாதவனுமல்லன். எல்லாம் பிரம்மப்பிரகாசமே யென்று நினைத்து வாழ்நாளைத் தள்ளுவோனுவான். அவனும் தான் பிரம்மத்தை யன்றி யில்லையென்றும், பிரம்மம் தன்னை யன்றி யில்லையென்றும் தேர்ந்து ஜீவியகாலத்தைத் தள்ளுகின்ருன். எவ்வுயிரும் தன்னையன்றி யில்லை யென்னும் திடநிச்சயம் அவனுக் குண்டாகின்றது. எந்த வஸ்துவும் அவனுக்குச் சினேகமல்ல; பகையுமல்ல. அவன் ஒன்றையும் விரும்புவதுமில்லை; வெறுப்பதுமில்லை. அவன் உலகத்திற்கு விலக்ஷணனு யிருக்கின்ருன். தான் சம்சார பந்தத்திற்குட்பட்டவன் என்னும் நினைவு அவனுக்குக் கிஞ்சிற்றுமில்லை.

ஆத்ம விசாரணை செய்யாதொழியின் ஜனன மாகின்ற இருள் மூடிக்கொண்டே யிருக்கும். இதை

"உலகெது நாமாரென்ன உற்றுநின்
றுணருமட்டுங்
கலகமார் பிறவிமோகம் கங்குல்போன்
மூடிநிற்கும்
அலகுறு மூலகுந்தாமும் அழிவில்சிற்
சோதியென்றே
சலனமில் கண்ணுற் கண்டோர்
தத்துவ நிலைமை கண்டோர்."

(ஞானவாசிட்டம்)

என்னுஞ் செய்யுளா லறிக. அன்றியும்,

"துலங்குவிசா ரம்படைத்துப் பேதைமைபோய்
நல்லறிவு தோன்றினோரை
விளங்குகல சத்தோரை யம்புகள்போற் காமாதி
விகற்பந் தாக்கா." (ஞானவாசிட்டம்)

என்பதனுல் நீங்காத நிஷ்காம விசாரணை யுடையோரை காமமுதலியவை பற்ரு என்றறியுக் கிடக்கின்றது.

காமம் என்றென்றில்லை யென்றும், இவ்விதம் தோன்றுவதெல்லாம் மனத்தின் விகற்பத்தினுலேயே யென்றும் நன்கறிந்து அப்பான்மை யுடைய மனதை தகுந்த விசாரணையினுலும், சாஸ்திராப்பியாசத்தினுலும், சத்சங்கத்தினுலும நல்வழியில் திருப்பிவிட்டால் காம முதலிய தீக்குணங்கள் இருந்தவிடம் தெரியாது ஓடிவிடும். அச்சமயத்தில் காமம் முதலிய குணங்க

ளுண்மையில் இல்லையென்றும் நமது முயற்சியின்மை யால் நம்மீது அவைகள் பாய்ந்தன வென்றும், உண் மையில்லாதவற்றை நாமே உண்டு பண்ணிக் கொண் டோ மென்றும் நன்கு விளங்கும்.

“ துகடீர்தம் மிடத்திலிளைப் பாறி மாறுத்
  துரியநிலை சாந்திநிலை தோன்று மட்டும்
மிகுநால்க ளுபசாந்தி யொழுக்கம் போதம்
  மிக்கவர்கூட் டரவிவற்றால் விசாரம் வேண்டும்.”
(ஞானவாசிட்டம்)

என்றபடி இவ்வாத்ம விசாரணையும் துரியநிலை தோன்றுமட்டும் வேண்டும். ஒரு காரியத்தை யடை யும்பொருட்டு நாம் பற்பல வழிகளை யனுஷ்டிக்கின் றோம். அதுபோல நாமும் உபசாந்தியடையு மட்டும் சாஸ்திராப்பியாசம், ஆன்மவிசாரணை, சத்சங்கம் முத லியவைகளைக் கொள்ளுகின்றோம். நமது லக்ஷியம் நிறைவேறிவிட்ட தானால் அதற்காக நாம் எடுத்துக் கொண்ட முயற்சியையும் அத்துடனேயே முடித்துக் கொள்ள வேண்டியதே யன்றோ! அதுபோலவே, உபசாந்தி நிச்சய முதயமாவது வரையில் இவ்வான்ம விசாரணையும் வேண்டற்பாலதாகும்.

---

## சத் சங்கம்.

உலகிற் பிறந்த பயனை யடையும் பொருட்டு மேலோர் பற்பல வழிகளைக் கண்டுபிடித்துள்ளார் கள். அழியாப் பதவியாகிய மோக்ஷத்தையடையும்

பொருட்டு விவேகிகள் கொள்ளக் கூடியவைகளில் மேலானது சாதுசங்கமேயாகும். மோக்ஷ விருப்ப முடைய மானிடர்களிடையே போய்ச் சேர்ந்தால் அவர்களது சுபாவம் நமக்கு முண்டாகி அகங்காரம் முதலிய துர்க்குணங்கள் ஒழிந்து விடும். அவர்க ளுடன் வினவிச் சந்தேக முதலிய வற்றைக் கெடுப்ப தோடு ஆன்ம விசாரணையுஞ் செய்துகொண் டிருக்க லாகும். குற்றமற்ற நல்லோர் கூட்டரவால் அஞ் ஞானமாகிய விருள் சிறிது சிறிதா யகன்றுவிடும். கூட்டரவால் குணங்கள் வேறுபடுகின்றன. ஆத லால் சத்சங்கத்திற் சேர்ந்து பழகுவதனல் துர்க் குணங்கள் அறவே யொழிகின்றன. அன்றியும், இச்சகம் துன்பத்திற் கேதுவாதலால் இதனின்றும் விடுபடும் பொருட்டுச் சாது சங்கம் போதிக்கின்றது. சதா உசாவியும், ஆன்ம நிர்ணய முதலிய வற்றைப் பற்றி விசாரணை செய்தும் வைராக்யத்தை யடையும் படி சாது சங்கம் உதவிபுரிகின்றது.

நாம் தினேதினே வீண் காலம் கழிக்கின்ருேம்; நல்ல சாஸ்திரங்களேக் கூட வாசிக்கச் சமய மில்லே யென்று திகைக்கின்ருேம். அங்ஙனமாயின் சாது சங்கத்தைச் சேர்ந்திருத்தல் எங்ஙனங் கூடும்? உலகம் பொய்யென்று தேர்ந்து சகல பற்றுக்களேயு மறுத்து இல்லம் விட்டுச் சாதுக்களுடன் சகவாசம் செய்து அவ்வழியே தம் வைராக்கியத்தைப் பலப் படுத்த மேலோர்கள் முயற்சிக்கிருர்கள். அது போல நாமும் துறக்கவேண்டுமோயின் எளிதாமோ?

அங்ஙனம் எளிதாயின் நம்மைப்போல் பாக்கியஞ் செய்தவர்களில்லை யென்றே சொல்லவேண்டும். அதற் கியலாதாயின் நம் மில்லத்திலிருந்து கொண்டே சகல பற்றுக்களையு மறுத்து, வரும் சாதுக்களை நல்வழி யில் உபசரிக்கவேண்டும். அப்பேர்க்கொத்த மேலோர் களைப்போல் ஆவதற்கும் பழகல்வேண்டும். அங்ங னம் பழகிடின் அவர்களுடைய சங்கத்தைச் சேர்ந் திருத்தல் மிகவும் எளிதான காரியமாகும். ஆதலால் நமது பந்தங்களைச் சிறிது சிறிதாய் நீக்கிச் சாது சங்கத்திற் சேர்ந்து வாழ முயலவேண்டும். நமக்கு மோக்ஷ இச்சை யுண்டாயின் எப்படியாயினும் நமது பந்தங்களை யொழித்து, ஆசைகளை யறுத்து அதற்காக உழைப்போம் என்பது நிச்சயம்.

" அறக்குறைவை நிறைவாக்குஞ் சம்பத்தாக்கு
மாபத்தைச் சுபமாக்கு மசுபந் தன்னைச்
சிறக்குமுபர்ந் தவர்கூட்ட மென்னுங் கங்கைச்
சீதநீ ராடினர்க்குச் செந்தீ வேள்வி
யிறக்கரிய தவந்தானந் தீர்த்தம் வேண்டாம்
இடர்பந்த மறுத்தெவர்க்கு மினியோ ராகிப்
பிறப்பெனும்வே லைப்புணையா முணர்வு சான்ற
பெரியோரை யெவ்வகையும் பேணல் வேண்டும்"
(ஞானவாசிட்டம்)

சாதுசங்கத்தைச் சார்ந்தொழுகுதல் கரைசேர வழியறியாது விழிக்கின்ற ஜீவர்கட்கு எவ்வளவோ நன்மையைக் கொடுக்கக்கூடியது என்பதை ஒவ்வொரு வரு மறியக்கடமைப் பட்டுள்ளார்கள்.

சுழலா நின்ற மனத்தைத் தீய வழியிற் செல்ல வொட்டாது தடுத்து ஆத்மஞான விஷயங்களிலேயே பிரவிருத்திக்கும் பொருட்டுச் சத்சங்கம் ஏவுகின்றது. மோக்ஷ மடைவதற்குக் கருவியா யிருப்பதன்றிச் சாது சங்கமானது பிறவிக் கடலைக் கடப்பதற்கு வேண்டும் சாதனங்களையும் உதவுகின்றது. விவேகிகள் மோக்ஷமடைதற்குக் குற்றமற்ற சாதுசங்க மொன்றே போதுமானது.

“ கூடியநின் சீரடியார் கூட்டமென்ருே வாய்க்குமென
வாடியவென் னெஞ்சுமுக வாட்டமுநீ கண்டிலையோ ”
(தாயுமானவர்)

என்பது சத்சங்கத்தின் பெருமையை விளக்குகின்ற தன்ருே !

மேவா நின்ற சாது சங்கம் முமூட்சுக்கட் கத்தியாவசியமாய் வேண்டற் பாலதாகும். இரஜோகுண தமோகுணங்களிற் கட்டுப்பட்ட மனமானது சத்துவ குண வயப்பட்டு நிற்கச் சாது சங்கம் உதவி புரிகின்றது. மோக்ஷத்தை விரும்பிய உடனேயே அது சித்திக்கக்கூடியதன்ருகையால், அதைப் பெறுதற்கு விடா முயற்சி அத்தியாவசிய மாகின்றது. மோக்ஷ மடைய வேண்டுமென்ற விருப்ப மேற்பட்டதும் அதை திரப்படுத்தச் சத்சங்க முதலியன வேண்டற் பாலனவாம். இல்லாவிடில் ஏற்பட்ட அவ்விருப்பமானது காற்றெதிரேற்றிய தீபம்போற் சம்சாரத்தாலுண்டாகும் தங்குதடைகட்கு முன் நசித்துப்போம்.

ஒருபோது முன் செய்த தவப்பயனுக மோக்ஷம் வேண்டுமென்ற எண்ணம் உண்டாகுமாயின் அதை உறுதிப்படுத்த முயலவேண்டும். பெரும்பாலார்க்கு அவ்வெண்ண முதிப்பதே யில்லே. கோடிக் கணக்கான ஜென்மங்களில் அனுபவித்த இவ்வுலக போகத்தை இன்னும் அவர்கள் விட்டொழிய இயலாதவர்களா யிருக்கிருர்கள். ஏனென்ருல், பூர்வ ஜென்மங்களில் அனுபவித்த போகங்களே மனம் விரும்புகின்றது. ஆதலால் மனமே நம்மைப் பாழ்ங் கிணற்றிற் றள்ளிவிட்டது. நாம் அதில் நீந்திக்கொண்டிருக்கிருேம். நம் கைகால்கள்களேப் பெய்திவிட்டன. நாம் இக்கிணற்றில் எவ்வளவு காலம் இவ்விதம் நீந்திக்கொண்டிருக்க முடியும்? நீந்தாமலே நின்றுவிடலாமென்ருல் ஜலத்தினுள்ளே மூழ்கிவிடவேண்டுவது தான். நாம் இப்படியே நீந்திக்கொண்டு போனுல் நிச்சயமாக விக்கிணற்றிற் கிரையாக வேண்டுவதே. ஆனுல், சாதுசங்கமானது இக்கிணற்றிலிருந்து நம்மை இரட்சிப்பதற்கென மேலிருந்து விடப்பட்ட வடம் ஆகின்றது. புத்திமான்களும், வைராக்ய சீலர்களும் இவ்வடத்தின் வழியாக ஏறிக் கரைசேர்ந்து விடலாகும்.

---

## போகம் விரும்பாமை.

நாம் இவ்வுலகத்திற் பிறந்ததும் ஒன்று மறியாத குழவியாக விருந்தோம். அச்சமயத்தில் இவ்வுலகத்தைப்பற்றிய எண்ணஞ் சிறிது மில்லாம லிருந்தது.

அகங்காராதி துர்க்குணங்கள் விலாசமடையாமல் நம்மில் ஒடுங்கியிருந்தன. நாம் அனுபவித்த போகங்கள் எப்படிப்பட்டவை யென்று நினைக்கவில்லை. அறுசுவையையும் நாம் உட்கொண்டிருக்கக் கூடுமாயினும், அக்குழவிப் பருவத்தில் அவைகள் இன்னவை யென்றுகூட நாம் அறிந்துகொள்ளவில்லை. அச்சமயத்தில் யார் நம்மை வைதபோதிலும் நமக்கு அவை விளங்கவில்லை. பாஷையின் உணர்ச்சி அப்பொழுது நமக்கில்லாதிருந்தது.

ஆனல், அப்பருவம் நீங்கவும் நாம் பாலப்பருவத்தை எய்தினேம். அச்சமயத்தில் அகங்கார முதலிய குணங்கள் சிறிது சிறிதாய்ப் பலப்பட்டு வந்தன. போகங்களில் நாம் சிறிது சிரத்தை கூடியவர்களாயிருந்தோம். அறுசுவையும் உட்கொள்வதில் பிரியப்பட்டு வந்தோம். அப்பொழுது உலகம் எப்படிப்பட்டதென்றும், அதில் நாம் ஏன் பிறந்திருக்கிறேமென்றும், நமது நிலைமை யென்ன வென்றும், கடைசியாக நம் கதியென்னவாகும் என்றும் சிந்திக்கவில்லை.

அதற்கப்பால் யௌவன திசை யெய்தவும் அகங்காராதி துர்க்குணங்கள் நம்மில் பலமாய் வாசஞ் செய்யத் தொடங்கின. அவைகள் நாடோறும் நம்மை வருத்திக்கொண் டிருக்கின்றன. நாம் இத்திசையில் நிறைந்த போகத்தை விரும்புகின்றேம். சுகவாழ்க்கையில் ஆசைப்படுகின்றேம்.

நாம் விரும்புகின்ற சகலபோகங்களும் பொய்யே யாகும். அவைகள் ஒருபோதும் நிலைபெற முடியாது. நாம் இத்தேகத்தை விடுவது வரையில் ஏதேனுமாகாரம் வேண்டுமே யொழிய அறுசுவை பதார்த்தங்களுடனேயே அருந்தவேண்டு மென்ற நியதியில்லை. ஒருவன் அறுசுவையோடு மூண்டி புசிக்கின்றான்; வேவேறொருவன் மிகக் கேவலமான ஆகாரத்தைப் புசிக்கின்றான். பார்க்கப்புகின் இவ்விருவர்களும் வயிற்றைப் பூர்த்தி செய்கிறார்களே யன்றி வேறு விசேஷ பலனொன்றையு மடைகிறார்களில்லை. இஷ்டமான சுவைநிரம்பிய பதார்த்தங்களை உட்கொண்டவனுக்கும் வாயலம்பி விட்டால் அவைகளின் குணங்கள் தெரிவதில்லை. ஆகையினால், மேற்கூறிய இருவர்கட்கும் இவ் விஷயத்தில் வேற்றுமையாதுங் கிடையாது. இது போலவே சகல போகங்களும் பொய்யேயாம். அவைகளை யனுபவித்தபின் பழைய நிலையையே யடைகின்றோம். விசேஷ குணமொன்று மில்லை. ஆதலால் இத்தேகம் நிலைபெறும் பொருட்டு ஏதேனு மூட்கொண்டு காலத்தைத் தள்ளவேண்டுமே யன்றி விசேஷ போகங்களில் நாம் சிறிதும் இச்சைகொள்ளலாகாது. இரச உணர்ச்சி வெல்லப்பட்டதானல் யாவும் வென்றதற்கொப்பா மென்பது மேலோர்களபிப்பிராயம்.

---

## உலகம் மித்தையெனல்.

நம் கண்கட்குத் திருசியமாகு மிப்பிரபஞ்சம் உண்மையானதன்று.

" இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக
மெமக்குத் தோன்ற " (தாயுமானவர்)
என்ற திருவாக்கி னுண்மை யுணர்க.

உலகமானது பார்ப்பதற் குண்மைபோல் தோன்றிடினும் ஆராய்ந்திடின் மித்தையே யாம்.
அன்றியும்,

"பொய்யான வுலகத்தை" (தாயுமானவர்)
என்றும்,

" சகம்பொயெனத் தம்பட்டமடியே"
(தாயுமானவர்)
என்றும் வருவனவற்று லவ்வுண்மை யறிக.

இப்பேர்க்கொத்த உலகமானது நம் கண்கட்கு மெய்யெனத் தோன்றி நம்மை மயக்குகின்றது. இப்பிரபஞ்ச வாழ்க்கையை மெய்யென நம்புகின்றவன் நிச்சயமாக ஏமாற்றப்படுகிறான்.

" இன்றைக் கிருந்தாரை நாளைக்கிருப்ப ரென்
றெண்ணவோ திடமிலையே " (தாயுமானவர்)
என்றபடி இன்றைக்கு ஓடித்திரிகின்றவர்களை நாளைக்கு மிவ்விதமே யிருப்பார்களென்று திடமாகச் சொல்ல முடியாது. அன்றியும் உடலானது எவ்விடத்தில் விழுந்துவிடப்போகிறது என்றும் தேர்ந்து கூறமுடியாது. எல்லாக் காரியங்களும் இந்திரஜாலம் போலுந் தோன்றுகின்றன. இவ்வுலகமே இந்திரஜால மயமாயிருக்கின்றது. இத்தகைய உலகத்தை நாம் எவ்விதம் நம்புவது ?

சினேகிதர்கள் என்றும், பகைஞர்களென்றும் சொல்வதெல்லாம் வீண். சினேகிதர் களாயினும், பகைஞர்களாயினும் மாண்டபின் வேற்றுமை தோன்றுவதில்லை. சத்யமெதுவென்று சொல்வதற்கென்ன விருக்கின்றது ? நாம் உலகத்தில் சாதாரணமாக மெய்யென்றும், பொய்யென்றும் சொல்கின்றோம். ஆராய்ந்து நோக்கின் பொய்யும் மெய்யும் கடைசியாகப் பொய்யாகவே போகின்றன. நாம் ஒரு மெய்யான விஷயத்தைக் கூறுகின்றோம். ஆனால் அதுவுங் கடைசியாகப் பொய்த்துப் போகின்றது. இவ்விதமே எல்லா விஷயங்களும் பொய்த்துப் போகின்றன.

“ ஊருஞ் சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளும்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே.”

(பட்டினத்தடிகள்)

என்ற திருவாக்கின் கருத்திற்கிணங்க, உலகத்திலே யாதொன்றும் நித்தியமல்லவென்றுணரக் கிடக்கின்றது. உலகத்தைச் செவ்வனே பிரித்துப் பார்த்தால் கடைசியாக ஒன்று மெஞ்சாது. எல்லாம் பொய்யாகவே போய்விடும். மெய்யின் அம்சத்தைக் கூடக் காணமுடியாது. இவ்வுண்மைகள் அனைத்தும் மேலோர்கள் திருவாக்கின்மூலம் நன்கறிதல்கூடும்.

நாம் இம்மாயா வுலகத்தின் வாய்ப்பட்டு அதனது கட்டளைப்படி நடக்கின்றோம். ஆதலால், நாம் சுதந்

திரர்கள் எனக் கருதப்பட மாட்டோம். உலகம் நம்மைக் கட்டிவிட்டது. இனி நாம் சுதந்திரர்கள் என்று கனவிலுங் கருதமுடியாது. ஒரு பக்கம் ஆசை நம்மைப் பலமாகக் கட்டிவிட் டிருக்கின்றது. ஆத லால் அது நம்மை ஆட்சி புரிகின்றது. நாம் அதனை யாட்சி புரியுங்காலம் வரவேண்டுமானல் நமது கட்டை யவிழ்த்துவிட வேண்டும்; அந்த க்ஷணத்திலேயே அதையும் பலமாய்க் கட்டிவிட வேண்டும். அப் படியே ஆசையின்கையிலிருந்து இரட்சைப்பட்டு விட்டபோதிலும் ஏனைய விஷயங்கள் நம்மை விடு மாறு தோன்றவில்லை. அவைகளையும் நாம் நாசஞ் செய்யவேண்டும். நம்மைக்கட்டிய எல்லாவற்றையும் நாம் நாசஞ்செய்தாலன்றி நமக்குச் சுதந்திரங் கிடைக் கப்போகிறதில்லை. இப்பொழுது உலகம் நம்மைக் கட்டிவிட்டது. இனி, நாம் உலகத்தைக் கட்ட முயற்சிக்க வேண்டும். உலகத்தை கட்டிய மாத்தி ரத்திலேயே அதன் பொய்யான ரூபத்தைக் கண்டு நாம் ஆச்சரிய மடைவோம்.

இவ்வுலகத்தில் நாம் அனுபவிக்கக்கூடிய சகல போகங்களும் முடிவில் நமக்கு விஷத்திலுங் கொடு மையாகத் தோன்று மென்பது திண்ணம். மனைவி யென்றும், புத்திரர்களென்றுங் களிகூறுவதெல்லாம் நாம் நம்மைக் கெடுத்துக் கொள்வதற்காகவேதான். ஏனெனறல், ஒன்றிலு முண்மை யில்லை.

மனைவி மக்கட்காகப் பொருளீட்டுதலும், அவ ரோடு மகிழ்தலும் முடிவில் துன்பத்தையன்றி யின்

பத்தைத் தருவதில்லை. அவர்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் என்ன? அவர்கள் முதலான சுற்றத்தார்களெல்லாம் உண்மையில் நமக்குச் சம்பந்த மற்றவர்கள்தானே. அவர்களைப்பற்றி நாம் என் கவலை யெடுத்துக்கொள்ள வேண்டும். நாம் பிறப்பினாலேயே தாய்தந்தையர் முதலானவர்களைப் பந்துக்களாகப் பெற்றோம். அதுவுங் கஷ்டமாயிற்று. இங்ஙன மிருக்க, மணஞ்செய்து புத்திரர்கள் முதலானவர்களையும் நாம் பெருக்கிக்கொள்ள வேண்டுமா? நமக்கென்ன வேலையில்லையா? பொய்யைப் பெருக்கிக் கொண்டே போகிறோமே! ஒரு நாளும் நாம் மெய்யைத்தேட முற்படுகின்றோ மில்லையே! கேவலம் சந்தையிற் கூட்டம்போல மூளைத்துள்ள சுற்றத்தை நம்பிக் கெட்டுப்போகும் நம் பேதைமை என்னே!

"தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ சந்தேகமில்லை"
(தாயுமானவர்)

என்றும்,

"..............................விவிதமா மிடத்தினின்று
வருந்தின்வந் தொன்றுவார்போன் மனைவிசேய்
முதலாமாயை" (ஞானவாசிட்டம்)

என்றும் வருவனவற்றால், மனைவி முதலான சகலரும் பற்பல விடங்களினின்றும் வந்து மார்க்க மத்தியிற் கூடிப் பிறகு பிரிகின்றவர்களே யாம் என்பது தெள்ளிதிற் புலனாகும்.

ஆதலால், பொய்யானவை யெல்லாம் விட்டு விட்டு மெய்யைத் தேடிப்பார்க்க வேண்டும். உலகத்தில் சாதாரணமாக நாம் சொல்லக்கூடிய மெய் யெல்லாம் கடைசியில் பொய்யேதான். ஆகையினுல், அத்தகைய மெய் நமக்கு அவசியமே யில்லே. முக்காலத்தும் அழிவில்லாத மெய்ப்பொருளே நாம் ஆராய்ந்தறிய வேண்டும். ஆதிமத்தியாந்த ரகிதமாய் விளங்கும் மெய்ப்பொருளே நமக்கு வேண்டும். ஏனைய பற்றுக்களே யெல்லாஞ் சிறிது சிறிதாக ஒழித்து மெய்ப்பொருளாகிய சச்சிதானந்தப் பாப்பிரமத்தை யடைய முயல்வோமாக.

---

## ஆசை.

மானிடர்களாகிய நமக்குற்ற பந்தங்கள் எண்ணற்கரியனவாகும். இலகுவாக மனிதன் சுதந்திரனுகி விட ஏது வில்லே. எவ்வழியூடே போயினும் தங்கு தடைகள் வாாமற் போகிறதில்லே. அத்தடைகட்கெல்லாம் நாம் அடிமைப்பட்டுக் கொண்டேதான் போகிருேம். இப்படியே நமது வாழ்நாள் முழுதும் போய்விட்டால், பின் எச்சென்மத்திற்ருன் நாம் மோக்ஷம் எய்துவோம். நாம் ஆசையை விட்டொழிவது வரையிலும் நமக்கு விடுதலே கிடைக்கப்போகிறதில்லே என்பது நிச்சயம்.

ஆசை மனிதனே யிலகுவாய்த் தன் வயப்படுத்திக் கொள்ளுகின்றது. ஒவ்வொருவரிலும் குடி புகுந்து

கொண்டு சிறுகச்சிறுக அகாத மாங்குழியில் தள்ளி விடுகிறது. பற்பல ஜென்மங்களில் வேரூன்றி வளர்ந்து வந்த ஆசை இச்சென்மத்திலும் தொடர் கின்றது. இதனை இத்துடனெழிக்காவிடின் இன் னும் பற்பல ஜென்மங்களில் நம்மைத் தொடர்ந்து கொண்டே வரும். நாம் எவ்வளவு முயன்றபோதி லும் நமது நேரில் அது போர் செய்யவே செய் யும். மிகவும் வைராக்கிய முடையவர்கட்கே யிதனை யொழிக்க முடியும்.

ஆசை யென்பது பெருங் காற்று. மனிதன் அதனுள் அகப்பட்ட துரும்புபோலக் காணப் படு கின்ருன். அன்றியும், அஞ்ஞானமாகிய மிகுந்த இருளினல் தன்னைமறந்து தவிக்கின்ருன். ஆறறி வுடையவனு யிருந்தும் கேவலம் அறிவற்றவனுகவே யிருக்கிருன். பூர்வ வாசனையானது அவனைத் தொடர்ந்து சென்று பிறப்பென்னுஞ் சாகரத்தில் முழுகச்செய்கிறது. தாரேஷனை, புத்திரேஷனை, தனே ஷனை என்னும் ஏடணுத்திரயங்களில் இலகுவில் அகப் பட்டுக் கொண்டுய்யு வழி யறியாமல் திகைக்கிருன். பொருள், பொருள் என்று புலம்பிக்கொண்டே நல் வழியிலும், தீயமார்க்கங்களிலும் பொருள் தேடுகின ருன். தனது பிற்கால நிலை என்னவாகுமென்று அவன் கனவிலும் கருதுகிருனில்லை. உண்பது முறங்குவதுந்தான் அவனது வேலையாயிருக்கின்றது. தான் வீணுய்க் கெட்டுப்போய் விட்டதாகவும், தனது நிலைமை சீர்திருத்தப்படா விட்டால், மென்மேலும்

தான் பயனறறவனுய்ப் போய்விடுவது நிச்சயமென்றும் அவன் கிஞ்சிற்றும் உணர்கிருனில்லே.

ஆசை புலன்கள் அடங்காமையினுல் எழுவதாகும். ஐம்புலன்களேயு மடக்கி வாழுப்பவனே ஆசை வருத்தாது. மனமடங்கினுலன்றி ஐம்புலன்களு மடங்கா. அவைகள் விஷயத்தின் கண் செல்லுவதே மனமடங்காக் குறையினுலே யாம் என்பதிற் சற்று மையமில்லே. ஆதலால் ஆசையை அடக்குவதென்பது மனத்தை யடக்குவதாகும். மனமே இச்சா சொரூபமா யிருக்கிறது. எந்தச் சமயத்திலும் நாம் எச்சரிக்கையா யிருக்கவேண்டும். இல்லாவிடில் மனம் நம்மைப் பாழுங்கிணற்றில் தள்ளிவிடும். சிற்சில சமயங்களில் செவிக்கினிய கீதங்களேயேனும், அல்லது வேறு எவற்றையேனும் கேட்கும்படி மனந் தூண்டும். அப்பொழுது நாம் அதன் வழிச் செல்லலாகாது. நாம் கேட்கப் புகுங்கால் நமக்கு தீமையை உண்டு பண்ணு திருக்குமாயின் எதையும் நாம் கேட்கலாம். உலக விஷயங்களேப் பெருக்குவதாயும், நமது வைராக்கிய நிலேக்குப் பங்கம் விளேப்பதாயு முள்ள எதையும் நாம் கேட்கவேண்டுவதில்லே. நமது நன்னிலேக்கு எவ்விததிலேனுஞ் சாதகமாயின் குற்றமாகாது. அதுபோலவே தேக சுகத்தை நாடுதலும் ஆசை யாகையினுல் அதையு மொழிக்க வேண்டும். தேகத்தைப் பாதுகாத்தல் முறையே யாயினும், அதற்கதிகம் சுகத்தை யுண்டு பண்ணிக் கொள்ளலாகாது. சுகத்தை நாடின் நமது நிலே பங்கப்பட்டுப் போகக்

கூடும். அன்றியுஞ் சிறுகச் சிறுக உலக விஷயங் களிற் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும். இவ்வாறே தான் கெட்ட காட்சியும் நம்மை உலக விஷயங்களில் தள்ளிவிடும். தவத்தி லுயர்ந்த பெரியோர்களுங் கூடத் தேவஸ்திரீகளைப் பார்த்த காரணத்தால் தம் நிலை பிறழ்ந்தனர் எனக் கேட்டிருக்கின்ருே மன்ருே! ஒரு வஸ்துவைப் பார்க்காவிடில் அதில் நமக்குக் கிஞ் சிற்றும் ஆசையுண்டாகாது. அதுபோலவே ஒரு வஸ்துவை நாம் உட்கொள்ளாவிட்டாலும், அதனது குணங்களைப் பற்றிக் கேளாவிட்டாலும் அதனை நாம் உட்கொள்ள விரும்ப மாட்டோம். சாதாரணமான ஆகாரங்களையே புசிக்கவேண்டுமன்றி விசேஷ போகங் களை நாம் விரும்புதல்கூடாது. இதனுலேயே,

“ கனியேனும் வறியசெங் காயேனு முதிர்சருகு
கந்தமூலங்க ளேனும்
கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனியாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினேன் ”

என்று மகான் தாயுமானவர் அருளி யுள்ளார். நாவினை வெல்லாதவன் உலகத்தை எங்ஙனம் வெல்லு வன்? வெல்லமுடியாது. அதுபோலவே கந்தத்தினை வெல்லாதவனும் உலகத்தை ஜெயிக்கமாட்டான் என் பது திண்ணம். ஆகையினல் சுகந்தத்தினையும் விரு ம்பலாகாது. சந்தன புஷ்பாதிகளை விரும்புகிறவன் லோகத்தையும் விரும்பத்தான் செய்வான். ஐம்புலன்

களையு மடக்கினாலன்றி உய்யவழி கிடையாது. ஐம் புலன்களையு மடக்கியாளும் மகான்களது புகழைக் கூற நாவேயில்லை.

“ஆசை யறுமின்க ளாசை யறுமின்க
ளீசனோ டாயினு மாசை யறுமின்கள்
ஆசை படப்பட வாய்வருந் துன்பங்க
ளாசை விடவிட வானந்த மாமே.”

(திருமந்திரம்)

என்பதைக் கவனிக்குமிடத்து ஆசை விடுதலே இன்பமென்பது விளங்கும். இகலோக போகங்களை யேனும் பரலோக போகங்களையேனும் விரும்பி நாம் கடவுளைப் பக்தி பண்ணலாகாது. ஏனென்றால், அது ஆசையோடு கூடிய உபாசனையாகும். அங்ஙனம் பக்திசெய்வதைவிட நிராசையோடு செய்வதே மேன்மையாகும். அங்ஙனம் உபாசிப்பதே விடுதலைக்குரிய வழியுமாகும். இவ்வுலக போகங்களையேனும் அவ்வுலக போகங்களையேனும் விரும்பி உபாசனை செய்கிறவன் தான் அனுபவிக்க விருக்கும் போகங்களைப் புசித்த பின் திரும்பவும் ஜனனமடைவது நிச்சயம். ஆதலின் இகபரசுகங்களை விரும்பாது உபாசிப்பதே மேன்மையாகும். இதனால், நல்வழியிலும் ஆசையிருத்தலாகாது என்பது பெறப்படுகின்றது.

ஆசைக்கு எல்லையே இல்லை. நாம் விரும்பிய பொருள் கிடைத்தபோதிலும் மென்மேலும் ஆசை மூளைத்துக்கொண் டிருக்குமே யல்லாது அத்துடன்

நின்றுவிடாது. இதைப்பற்றித் தாயுமானவர் கீழ்க் கண்டவாறு கூறுகின்றார் :—

"ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளினுங் கடன்மீ திலே
ஆணைசெல வோநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக்க லைந்திடுவர்
நெடுநா ளிருந்த பேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவர்."

மனிதருள் ஏழைக்கும் செல்வ வந்தனுக்கும் ஆசையில்லாமற் போகவில்லை. ஏழை தனக்கிருக்கும் பொருளை விடக்கூடுதல் பொருளை இச்சிக்கின்றான். செல்வவந்தனும் தனக்கிருக்கும் பொருளை விடக் கூடுதல் பொருளை இச்சிக்கின்றான். இவ்விதமே ஒவ்வொருவரும் தத்தமக்கிருக்கும் பொருளைவிடக் கூடுதல் பொருளை இச்சிக்கின்றனர். ஆதலின் ஆசைக்களவே யில்லை யென்பது நன்கு விளங்குகின் றது. இத்தகையு ஆசையைப் பொய் என்று மேலோர் கூறியுள்ளார்.

"ஔவிய மிருக்கநா னென்கின்ற வாணவ
மடைந்திட் டிருக்க லோபம்
அருளின்மை கூடக்க லந்துள்ளி ருக்கமே
லாசாபி சாச முதலாம்
வெவ்விய குணம்பல விருக்குமென் னறிவூடு"

என்று தாயுமானவர் கூறியது காண்க. இனனும் அம்மகானே,

“ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவு
மனதலையுங் காலம்
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட் டதுந்
தூர்ந்து முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமை
பற்றி நிற்ப ரந்தோ
தேசபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசை
யின்றேல் தெய்வ முண்டோ”

எனவும்,

“அன்பின்வழி யறியாதவென் னைத்தொ டர்ந்தென்னை
யறியாத பக்கு வத்தே
ஆசைப்பெ ருக்கைப்பெ ருக்கிக்கொ டுத்துநான்
அற்றேன லந்தேன்”

எனவும் கூறிப்போந்தார்.

ஆசை யென்னும் கிழத் தாசி தனது விருப்பம் நிறைவேறும் பொருட்டுத் திரவியத்தை நம்பி எவ் வினைத் தொழில்களை யுடையவர்களையும் பின் தொடரும். ஆனால் அடுத்த நிமிடத்திலேயே தனதிஷ்டம் நிறைவேறாமல் துக்கத்தில் வீழும். இவ்வாசை யானது தன்னாலாகாத காரியங்களில் முயன்று அமைதியின்றி வீணாய் வருந்துகின்றது. இப்பேர்க் கொத்த ஆசையால் யாது பிரயோஜம்? ஆகையால்

இதனைக் கெடுத்தலே முறையாகும். ஆசையைக் கெடுப்பதற்குச் சிந்தாத்தியாகமே உயர்ந்த ஔடதமாம்.

“காவின்மதர் வண்டெனப் பாதலம்விண்
டிசையனைத்துங் கணத்து லாவும்
வாவிவளர் மயலொன்றே வருத்தமனைத்
தினும்பெரிய வருத்த நல்கும்
மேவுமரா ணுறைபவர்க்குந் துயர்செய்யு
மாசையெனும் விடூசி கைக்குத்
தேவர்புகழ் மந்திரமாஞ் சிந்தையற
லுலகிடர்போம் சிந்தை யற்றால்.”

(ஞானவாசிட்டம்)

---

## அகங்காரம்.

மக்கள் மேன்மையை வேண்டின் அதற்குத் தக்க முயற்சியிற் கண்ணுங் கருத்துமா யிருக்க வேண்டும். இல்லாவிட்டால் கொண்ட நோக்கம் நிறைவேறுவது அரிதே யெனலாம். அதுபோலவே தான் நாம் இப்பிறப்பை ஒழிக்கும் விஷயத்திலும். நாம் தினேதினே சம்சாராதி துன்பங்களில் மிகவும் வெறுப்புக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் அவைகளை ஒழிப்பதில் நாம் கருத்துடையவர்களாவோம். அதனால் தான் நமது பிறப்பு மொழிய வேண்டியிருக்கிறது. இவ்வுலக இன்பங்களில் நாம்

னசை யுடையோர்களாய் இருந்தால் பிறப்பிறப் பென்னும் படுகுழியில் மேலுமேலும் விழுந்துகொண்டிருக்கவேண்டி வரும் என்பதிற் கிஞ்சிற்று மைய முண்டோ ?

உலகத்தின்கண் எல்லோரு மிதை யறிந்திருக்கிருர்கள் என்று சொல்வதற்கிடமில்லை. ஒரு சிலரே அறிந்திருக்கிருர்கள். அவர்கட்குத் தான் ஜனன மரண சாகரத்தினின்றும் விடுதலைபெற வேண்டுமென்ற எண்ண முதயமாகிறது. ஏனையோர்க்கதன் நினைவேவருகிறதில்லை. ஆகையினுல் அவர்கள் பாழே போய்விடுகிருர்கள். இவ்வுலகஇன்பங்களியாவு மநித்திய மென்பதை யவர்கள் நன்கறிந்திருந்தால் சிறிதாவது தமது புத்தியை நல்வழியிற் செலுத்தாமல் இருக்கமாட்டார்கள்.

" தந்தையிவ னிற்பிறந்து வளர்ந்துபலகலை
தரித்து சதாசாரத்தால்
வந்துயர்நன் னதியாடி வாரிதிசூழ்
புவியுழன்று வருத லோடு
மிந்தநெடுஞ் சகமோகத் திச்சையெலாந்
தீர்ந்ததிதி லின்ப மில்லை
யந்தமுறல் பிறப்பதற்கே பிறப்பதுமீட்
டிறப்பதற்கே யனித்த மியாவும்"

(ஞானவாசிட்டம்)

என்பதை நன்குணர்க.

கருத்து நல்வழியிற் செல்லவேண்டு மென்பது அகங்காராதி துர்க்குணங்களை யொழித்துப் பிறவா உரிமைபெற முயற்சிக்க வேண்டுமென்பதே யாம். அகங்காரத்தைவிடக் கொடிய பகைவன் மக்கட்கு வேறு கிடையாது. நல்வழியில் வேலை செய்கின்ற வரையும் பொருமையால் அகங்காரங் கெடுத்துவிடு கிறது. எவ்வெவ்விதங்களி லெல்லாம் மனிதரைக் கெடுக்க முடியுமோ அவ்வவ்விதங்களி லெல்லாம் கெடுக்கத்தான் அகங்காரம் முயற்சிக்கிறது. அத் தகைய கொடிய அகங்காரம் நமக்கு உண்மையிற்பகை யாயிருந்தும் அதனிடத்தில் நாம் கேண்மை பாராட்டு கிரேம். இது என்ன விந்தை!

பயிர்கட்குக்களை எவ்விதமோ அவ்விதமே உயிர் கட்கு அகங்காரமும். அகங்கார நீங்கியவிடத்தன்றி உயிர்கட்குய்வில்லை.

“மலமுள சலத்தினின்று மலத்தினை நீக்குங்காலை
சலமது நிமல மாகிச் சகத்தினிற் ருேற்று மாறே
நிலையுறு தன்னுன் மாவி னின்றகங் காரமாதிப்
பலவித வசத்தை நீக்கிற் பரமமா மான்மா தோன்
[றும்”

(விவேகசூடாமணி)

என்னுங் கருத்துணர்க.

அகங்கார மடங்கினலன்றித் தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவ தென்று மில்லை யென்று மேலோர் கூறி யுள்ளார். அகங்காரம்தான் பெருந்தடையா யிருக் கிறது. நாம் நமது வழியைத் தொடர்கின்ருேம்.

என் செய்யலாம். அகங்காரமாகின்ற கல் நம்மைத் தடை செய்கின்றது! அதை யெடுத் தப்புறந் தள்ளினுற்ருனே உய்வுண்டு? ஆகலின் தடைகல் லான அகங்காரத்தை எவ்விதமும் பிடுங்கி எறிய வேண்டுவது நமது கடமையாகும்.

நூல்களைக் கற்றளவிலேயே ஒருவன் சாந்த மடையமாட்டான். அதன்படி நிற்றலினுலேயே சாந்தமடைதல் கூடும். நாம்கற்ற நூல்களிலிருந்து தக்க அறிவை யடைகிறேம். வேதாந்தத்தைப் பற்றிப் பிரதி பாதிக்கின்ற நூல்களையும் நாம் கற்கி ரேம். அவற்றுள், அகங்காராதி துர்க்குணங்களை யொழித்து முத்திக்கு வழிதேட வேண்டுமென்று சொல்லப்பட் டிருக்கிறது. அந்நூல்களைக் கற்ற பயன்பெற வேண்டுமானல், அவை கட்டளை யிட்ட படி நாம் நடக்கவேண்டுமல்லவா? அதை விட்டு மென்மேலும் அகங்காராதி குணங்களை வளர்த்துக் கொண்டிருப்பதன் நோக்க மென்ன? அகங்காரம் நமக்குப் பகை என்பதை யறிந்தும் அதை விடா விட்டால் நாம் மூடர்களன்றி வேறு யார்?

அகங்காரமே ஆசையை எழுப்புவதற்குப் போது மானது. அதுவே ஆபத்திற்குத் தானமாயிருக்கின் றது. அறிஞர்கட்கு அவமானத்தையுந் தீராத் துன்பத்தையு மளிப்பது மதுவே யாகும். மன வமைதியின்மையும், உலக வியாபாரமும் அகங்காரத் தினல் மிகுதியாயுண்டாகும். ஆத்மாக்களனைத்தும்

அகங்கார மெய்துதலினல் மயக்கமுற்று அறிவிழக்கின்றன.

அகங்காரத்தினுல் மாயை வந்துறுகின்றதென்று தாயுமானவர் கூறுவது காண்க :

“ நானென்னு மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் செகமாயை நானுவாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்ப
சாகரத்தின் பெருமையெவர் சாற்றவல்லார் ”

ஜனனத்தை உண்டாக்குவதில் அகங்காரமே முதன்மை பெற்றதா யிருக்கின்றது. ஆதலின், எந்நேரத்திலும் அதுவந்தடையாமற் காக்கவேண்டும்.

“ தொந்தமாம் பவத்தைச்செய்யுந்
துட்டமாம் பிரதிபந்த
மைந்தனே யனேகமேனு
மருவிய வதனுக்கெல்லாம்
முந்தியு விகாரமாக
மூளைத்திடு மகங்காரந்தான்
சந்தத மூலமத்தைச்
சருவதா வொழிக்கவேண்டும் ”

(விவேகசூடாமணி)

துன்பத்தைச் செய்யா நின்ற வகங்காரமானது கிஞ்சிற்று மிருத்தல்கூடாது. இருக்குமாயின், சீவர்களுக்குச் சுகமுண்டாவதில்லை. யாதேனுங் காரணம் பற்றி இவ்வகங்காரமானது எழுமாயின், உடனே

அணுமாத்திரமுஞ் சேடியாவண்ணம் அதனை யடக்குதலே முறையாம். அகங்காராதி துர்க்குணங்களை யடக்காதவன் எத்தன்மைத் தான பலமுடையவனு யிருந்தாலும் ஒருபோதுந் தீரனுகான். அகங்கார மொழித்தவனே தீரர்கட்குள் தீரனெனலாம்.

அகங்காராதி குணங்களாகிய விருண்ட மேகங்களே ஞானமென்னுஞ் சூரியனை மறைத்திருக்கின்றன. அம்மேகங்களொழிந்தாலன்றி ஞான சூரியன் பிரகாசிப்பதில்லை. அகங்காரம் ஒருபோது ஒடுங்கி விட்டாலுந் திரும்ப எழாமலிராது. உளத்தினுல் நினைத்த மாத்திரத்திலேயே அகங்காரம் திரும்பவு முற்பத்தியாகின்றது.

“ பெருகிய வகந்தை மெத்தப்
பெயர்ந்திடப் பட்டபோதும்
ஒருகணமேனு மற்று
முளத்தினு னினைக்கப் பட்டால்
விரிவுறப் பின்னு முண்டாய்
விட்சேபம் வெகுவாய்ச் செய்யும்
மருவுகாற் றுலலைந்த
மழைக்கால மேக மேபோல் ”

(விவேகசூடாமணி)

ஆகையினுல் அகங்காரத்தை ஒழித்துப் பிறகு அதனைச் சிந்திக்கக்கூடச் செய்யலாகாது.

அகங்காரத்தினுலேயே ‘ யான் ’ ‘ எனது ’ என்னும் விகற்பம் எழுகின்றது. ஆனுல்,

"நோக்கற் கரிதான நுண்ணியவான் மோனநிலை
தாக்கற் குபாயஞ் சமைத்தபிரான்—காக்குமுயி
ரத்தனைக்கு நானடிமை யாதலினல் யானெனதென்
றித்தனைக்கும் பேசவிடமில்"

என்ற மகான் தாயுமானரின் வாக்கின்படி கவனிக்குமிடத்து 'யான்' 'எனது' என்று சொல்வதற்கே இடமில்லை. அப்பால் அகங்கார முண்டாகு மாறென்? அறிஞரிதனை யறிந்தேனும் அகங்காரத்தை அறவே யொழிக்கவேண்டும். எல்லாம் பிரம்ம மயமென்று தேர்ந்தால் அகங்காரமறவே ஒழியும் என்பதிலையமில்லை. அகங்கார மொழிந்த ஞான்றே ஐக்கிய நிலை புலப்படுவதற்குத் தடையிராது.

"இருளினல் மூடப்பட்ட வீனமாம் புந்தி செய்த
புரையகங் காரமியாது பூருவந்தோன்றிற் றந்தப்
பரவிய வகங்காரந்தான் பற்றற நசித்துப்போனல்
விரிவுறு பரசிவைக்யம் விக்கினமின்றித் தோன்றும்"

(விவேகசூடாமணி)

---

## பந்தம்.

உலகவிடய வஸ்துக்களினற் கட்டுப் படுவதே பந்த மென்னப்படும். விடயபோக விச்சையினற் பந்தம் பலப்பட்டு உயிர்களை மிகவுந் துன்புறுத்தும். விடயபோக விச்சை நீங்குமிடத்து மிகவும் துன்புறுத்தா நின்ற பந்தமறவே யொழியும். பந்தமிருக்கு

மட்டும் மோக்ஷ மடைவதற்கு உயிர்கட்குச் சாத்தியப்படமாட்டாது. மலினம் நீங்கினலன்றித் தூய்மை வந்தடையாது. அது போலவே, பந்தம் நீங்கினலன்றி மோக்ஷமும் வாராது. அன்னுள் முதலின்னுள்வரையிலும் ஜீவர்கள் உலகத்திற் கட்டுப்பட்டிருப்பதால் சுதந்திரமின்றித் தவிக்கின்றனர்.

இன்னும் நாம் இப்பந்தத்திற்கு வயப்பட்டுழல்வோமாயின் நமக்குக் கதியென்ன? நாம் பந்தங்களைத் தினே தினே பெருக்கிக் கொள்கிருேமேயன்றி அவற்றை யில்லாதாக்க முயல்வதைக் காண்கின்ருே மில்லையே. பந்தத்தைப் பெருக்கிக்கொண்டே போயின் நாம் விடுதலை பெறும் நன்னுள் உண்டென்று கனவிலுங் கருதமுடியுமோ? கட்டுப்பட்ட ஜீவர்களனைத்தும் பூமிக்குள்ளிருக்கின்ற கிருமிகளைப் போலவாம். பந்தமாகிய மயக்கத்தினுல் ஜீவர்கள் எல்லாம் பாழாய் மீண்டும் மீண்டுஞ் சென்மத்தையெடுத்துப் பெரியதுன்பக் கடலில் முழுகிப் போகின்றனர்.

---

## ஆயுள் க்ஷணம்.

இவ்வியன் ஞாலத்துதித்த சகலமும் நாசமுறுவது திண்ணமேயாம். எனினும் நம்முள் பலரும் அவ்வுண்மையை நினைக்கின்ருர்களில்லை. எல்லோர்க்குஞ் சாக்காடு வந்துறுவது திண்ணமென அவர்களறிந்திருந்த போதிலும், அதைப்பற்றி நினைப்பது

கூடவில்லை. தினே தினே தமக்குற்ற விஷயங்களி லீடுபட்டுழைக்கிறார்களே யன்றி மரணத்தருவாயில் தம் கதி யென்னவாகு மென்றும், மரித்த பின் தாம் எவ்வித நிலையில் இருப்பார்களென்றும் அவர்கள் ஆராய்ந்துணர்கிறார்களில்லை.

ஆயுளானது நிலையுடைத்தன் றென்று உணரா தார் யார்? இன்றிருப்பவர்களை நாளைத் தினங்கா ணவியலுமோ என்பது கூடச் சம்சயமன்றோ! தேவர்கள் ஆயுளும் மித்தையாமாயின், மானிடர் களின் ஆயுள் எவ்வாறும்?

"கற்பமாங் கணகாலத்தின் கமலயோனிகளு மாய்வர்"

என்ற ஞானவாசிஷ்டக் கருத்தின்படி பிரமாக்களும் நிலையில்லாதவர்களே யன்றோ!

"சாற்பருவ மேகமெனத் தைலந்தீர் விளக்கென்னத்
 தரங்க மென்னத்
திரப்படநீங் குவதாகிச் சிறிதுமிளைப்பாறுத
 சிந்தைத் தாகிப்
பரப்புடைய சேட்டையதாய்ச் சூனியமாம் வாணுளின்
 பயனை நாடிற் [குன்
றாப்பரிய துயராக்கு மொட்டகத்துக் குயிர்தொலைக்
 கூலே போல" (ஞானவாசிட்டம்)

என்னுஞ் செய்யுளால் ஆயுளினல் வருந்துன்பத்தின் தன்மை யுணர்க.

"தாமோதரன் முதலோர் சாதனால் சாற்றுவதும்
பூமேலோர் பொன்றுவதுங் கண்டோமே"
(நீதிவெண்பா)

என்பதனல் விஷ்ணுவின் ஆயுளும் மித்தையாவது காண்க.

இப் பூதலத்துள்ளோருந் தினந்தோறும் மரண மடைவதைக் கண்டும் நாம் தூங்கிக்கொண்டே யிருக்கின்றோம்.

"எப்போதாயினுங் கூற்றுவன் வருவான்
அப்போதந்தக் கூற்றுவன் றன்னைப்
போற்றவும் போகான் பொருளொடும் போகான்
சாற்றவும் போகான் தமரொடும் போகான்
நல்லாரென்னுன் நல்குரவறியான்
தீயாரென்னுன் செல்வரென்றுன்னுன்
தரியா னெருகணந் தறுகணாளன்
உயிர்கொடுபோகான் உடல் கொடுபோகான்
ஏதுக்கழுவீர் ஏழை மாந்தர்காள்" (கபிலரகவல்)

என்றபடி யமனுனவன் எந்தச் சமயத்திலாகிலும் வந்துறுவான் என்பது திண்ணமாகும்.

ஆனல் அவ்யமன் வருமுன்னே நாம் நம்மைச் சீர்படுத்திக்கொள்வதே நலமாகும். இன்றேல் எமன் வாதைப் படுத்துவானன்றோ! அத்தகைய எமனைக் கண்டு பயப்படாவண்ண நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்வதே மேன்மையாகும். மகான்கள் எமனைச் சிறிதும் பொருட்படுத்துவதில்லை.

"பட்டிக்கடாவில் வருமந்த காவனைப்
பாரறிய
வெட்டிப் புறங்கண்ட லாது விடேன் வெய்ய
சூரனைப்போல்
முட்டிப்பொருத செவ்வேற் பெருமாடிரு
முன்புநின்றேன்
கட்டிப் புறப்படடா சத்திவாளென்றன்
கையதுவே"

என்றுன்றோர் கூறியுள்ளது காண்க.

எமன் வருவதற்கு முன்னமேயே நாம் நம்மைப் பக்குவப்படுத்திக் கொண்டால் யமன் தீண்டான். ஐக்கிய நிலை யெய்துதற்குச் சரீரத்தைப் பயன்படுத்திடின் அதுவே மேன்மை யானதாகும். அநித்திய மாகிய ஆயுள் முடிவதற்கு முன் நாம் நன்மையடையும் வழியில் பிரயாசைப்பட வேண்டும். எல்லாவற்றிற்கும் 'விதி' 'விதி' என்று சொல்லிக்கொண்டிருந்தால் நாம் கரை யேறுமாறுண்டோ? எண்ணற்கரிய ஜன்மங்களை யெடுத்தாள் வதற்குக் காரணமும் நமது விதியே தான் என்பதில் ஐயமில்லை. ஆயினும் நாம் செய்த கர்ம பலனே விதியென்று கருத வேண்டும். முன் செய்த கர்மத்தின் பயனே நாம் எடுத்தாண்ட ஜன்மங்கள். கர்மசேஷ முண்டெனின் இன்னும் பல்லாயிரஞ் சன்மங்களை யெடுத்தாள்வது திண்ணம். உலகத்தில் எல்லா உயிர்களுந் தத்தங் கர்மத்தின் படியே பிறக்கின்றன. சிலமனிதர் செல்வந்தர்களாயும், சிலர் வறியவர்களாயும், சிலர் சுகி

களாயும், சிலர் ரோயாளிகளாயுங் காணப்படுவது அவ்வர்களுடைய கர்மபலனே தான்.

---

## நிட்காம கர்மம்.

கர்மத்தினுலேயே பிறப்புண்டாகின்றது. கர்மந் தீர்ந்திடின் பிறப்புண்டாவ தில்லே. ஆனுல் கர்மந் தீர்வதற்கு மார்க்கமுங் காணப்படுகிறதில்லே. முன்பு செய்த கர்மங்களின் பயனுக இச்சன்மத்தை யெடுத்தோம். இன்னுங் கர்மம் முழுவது மொழிந்தபாடில்லே. சேட முண்டு. இது மட்டோ? இச்சென்மத்தினுங் கர்மம் செய்யாதிருக்க வழியில்லே. ஆகவின் நாம் ஓயாது கர்மஞ் செய்துகொண்டேயிருக்கிரேம். சேடித்த கர்மத்துடனே இக் கர்மமுஞ் சேரின் பின்னும் எண்ணற் கரிய சென்மங்களே யுண்டாக்கும். அப்பால் அவ்வச் சென்மங்களி லுண்டாகும் கர்மமுமுண்டு. இங்ஙனமே பார்த்தால் ஒருபொழுதுஞ் சென்ம மில்லாமற் போவதில்லே யெனத் தோன்றுகிறது.

ஆனுல் இதற்குப் பரிகார மில்லாமற் போகவில்லே. நாமிச் சென்மத்திற் கர்மம் செய்கின்ருேமெனினும் அதை ஈசுரார்ப்பணமாய்ச்செய்து விட்டால் அதன் பலன் நம்மைச் சாராதொழியும். புண்ணிய கைங்கரியங்களேச் செய்யினும், பாப கர்மங்களேச் செய்யினும் அவற்றை ஈச்சுரனிடத்தில் அர்ப்பித்து விட்டால் நாம் சுகமாய் வாழலாம். நாம்

செய்தவை யெனக் கருதப்படுஞ் சகலவித கருமங் களும் ஈச்சுரனிடத்தில் அர்ப்பிக்கப் படவேண்டும்.

"அவனன்றி யோரணுவும் அசையாது"

என்ற ஆன்ருேர் வாக்கிற் கிணங்க, ஈசன் உத்தரவா லேயே நாம் சகலவித கர்மங்களையுஞ் செய்கின்ருேம். ஆகையினுல் அவைகளை யெல்லா மவர்க் கர்ப்பிப்பது முறையேயாகும். அங்ஙனம் அர்ப்பித்திடின் நிச்சய மாகவக்கர்ம பலன்கள் நம்மை வந்தடையா. ஆனுல் புண்ணிய கர்மங்களைச் செய்தவிடத்து 'நான் செய்தேன்' என்றும் பாப கர்மங்களைச் செய்த காலத்து 'அவன் செய்தான்' என்றுஞ் சொல்வது மிகவும் பாபமாகும். புண்ணிய கர்மபலன்களை யேற்றுக் கொண்டு பாபகர்ம பலன்களைக் கடவு ளிடத்தி லர்ப்பிக்கின் அப் பாப கர்மங்கள் அவ் வாறு செய்பவர்களைப் பன்மடங்காய் சேரும். ஆகை யினுல் புண்ணிய கர்மங்களையும், பாபகர்மங்களையும் ஒருங்கே கடவுளிடத்து அர்ப்பித்துவிடல் வேண்டும். நாம் கர்த்திருத்துவமாயினும் போக்திருத்துவமாயி னும் வகிக்கலாகாது.

நாம் முன்செய்த கர்மபலத்தினுல் இச்சென்ம மெடுத்துள்ளோம். எஞ்சிய கருமம் சஞ்சிதம் என் னப்படும். நாம் இச்சென்மத்தில் அனுபவிப்பதற் கென விடுக்கப்பட்டது பிராரத்த மெனவும், இச் சென்மத்தி லியற்றுங் கருமங்கள் ஆகாமிய மெனவும் சொல்லப்படும். பிராரத்தகர்மம் அனுபவித்தன்றித்

தீராது. அது இச் சென்மத்தில் அனுபவித்துத் தீரும். ஆனல் இச்சென்மத் திலியற்றுங் கருமம் நம்மை எங்ஙனம் பற்றுதொழியு மெனில், ஈசுரராய் பணமாகச் செய்வதினு லொழியும். அதாவது நிட் காமத்தினுல் ஒழியும். பலனைக் கோராத கருமமே நிட்காம கருமம் என்று சொல்லப்படும். நிட்காம கருமத்தினுல் ஆகாமிய மில்லா தொழிகின்றது. இங் ஙனம் பிராரத்தமும் ஆகாமியமும் போய்விட்டால் எஞ்சி நிற்பது சஞ்சிதமாகும். அச் சஞ்சிதமும் இரண்டொரு ஜன்மங்களால் ஒழிந்துபோம். ஆனல் அச்சென்மங்களிலும் ஆகாமியத்திற் கிடன்கொடா வண்ணம் பாதுகாத்துக் கொள்ளவேண்டும். இங் ஙனமே நடப்பதாயின் கர்மத்தி ரயமுமில்லாமற் போகின்றன. அப்பால் ஜனன துன்பமேயில்லை.

நிட்காம கருமத்தின் பயன் இத்தகைய மாட் சிமை யுடையதாகும். நாம் செய்யுங் கருமங்களை யர்ப்பித மளிப்பதாயின் புண்ணிய கர்மங்களைச் சுருக் கவும், பாபகர்மங்களைப் பெருக்கவுஞ் செய்யலா காதோ வெனில், அது தெய்வ விரோதமா மென்க. ஈசனருளின்றி ஒன்றுஞ் சித்திக்கா தாகலின் ஈசனரு ளையே முதலிற் பெறற்குரிய மார்க்கத்தினைத் தேட வேண்டும். புண்ணிய கர்மங்களால் தெய்வத்திற்குப் பிரீதியும், பாப கர்மங்களா லப்பிரீதியு முண்டாகின் றன. ஆகையினுலே புண்ணியகர்மங்களைச் செய்வதி லேயே நாட்டஞ் செல்லவேண்டும். தெரியாமற் செய்த பாப கருமங்களாயின் பாதகமில்லை. ஆயி

னும், இயன்றமட்டும் பாப கர்மங்களைச் செய்யா திருப்பதில் கருத்தை யூன்றுவது நம்மை நாம் பாது காத்துக் கொள்வதாகும்.

நிட்காமிய கர்மத்தினுல் ஆகாமிய முண்டாமற் போகின்றது என்பது முன்னர் எடுத்துக்காட்டப் பட்டது. சஞ்சிதம் இரண்டொரு ஜன்மங்களாற் போகுமென வியம்பினேம். ஆனல் ஞானேதய மாகுஞ் சமயத்தில் சஞ்சிதம் ஞானக்கினியினல் எரிந்துபோகின்றது. ஆகையினுல் பிறகு ஜன்மங் கட்குக் காரணமேயில்லை. அவ்வாறே ஆகாமிய முண் டாயின் அதும் ஞானக்கினியினல் வெந்து நீருய்ப் போம்.

---

## வைராக்கியம்.

எந்தக் காரியத்திலேனும் போதுமான வெற்றி யுறவேண்டுமாயின் வைராக்யமே முதன் முதலாக வேண்டும். மனிதர் சாதாரணமாகச் சிற்சில நாட்கள் மட்டும் தாம் எடுத்துக்கொண்ட காரியத்தைச் சிறிது முயற்சியோடு செய்கின்றனர். அப்பால் அதனைத் திறம்பட நடத்துவதற்கு முடியாமற் போய்விடுகிருர் கள். ஏதேனு மொருகாரியத்தில் ஈடுபட்டு, அதில் சின்னுட்கள் உழைத்து அதற்குப்பின் சோர்வடைந்து அதனை நழுவவிட்டு விட்டால் என்னபயன் விளையும்? எடுத்துக்கொண்ட தொழிலை விடாமுயற்சியோடு செய்வதே பலனைத்தரும்.

ஆகையினல் சம்சார சாகரத்தைக் கடத்தற்கும் வைராக்யம் வேண்டும். முதன் முதலாக இவ்வுலக வாழ்வின் மீது வெறுப்புண்டாக வேண்டும். அவ் வெறுப்பு வரவேண்டுமாஞல் பல்வித வேதாந்த நூல் களை நன்காராய வேண்டும். சில நாட்கள் ஆராய்ந்து பிறகு சோர்வடைந்து விட்டால் பயன் யாதுமில்லை. அதிலும் முழு வைராக்யமும் செல்லவேண்டும்: அந் நூல்களை வாசிப்பதனுலேயே வைராக்கியம் மென் மேலு முண்டாகும். அன்றியும், இவ்வுலக வாழ்வினு லுளதாகுந் துன்பத்தின் தன்மையும் நன்கு விளங் கும். அதற்கப்பால் இவ்வுலகவாழ்வின் மீது சிறுகச் சிறுக வெறுப்புண்டாகும். ஆனல் அவ்வெறுப்பு மாத்திரத்தினுலேயே பிறப்பெனும் பிணி ஒழிந்து விடாது. அப்பிணிக்கேற்ற ஔடதத்தையே தேட வேண்டும். ஔடதமின்றிப் பிணியொழியும் வழி யுண்டோ?

ஞானமே பிறப்பென்னும் பிணியைத் தீர்க்க வல்லதா யிருக்கின்றது. ஆகையினல், நாம் அதை யடைய முயலவேண்டும். அதற்குத்தான் வைராக் யம் வேண்டியிருக்கிறது. மனத்தினுல் நினைத்த மாத்திரத்தில் ஞானமுண்டாவதில்லை. அன்றியும், நூல்களினுலுளதாகும் ஞானம் பிறப்பை யொழிப்ப தற் குபயோகமாகாது. நூல்களினுலுண்டாகும் ஞானத்தைக் கொண்டே பூர்ண ஞான மெய்துதற் குள்ள வழிகளில் முயலவேண்டும். அத்தகைய வழி களில் முயன்ருல்தான் நன்மை உண்டாம்.

எவ்வழியூடே சென்றாலும் வைராக்கிய மில்லா விட்டாற் பிரயோஜனம் சிறிதுமில்லை. சில நாட்கள் முயன்று பிறகு சோர்வடைந்து எடுத்த தொழிலை விட்டுவிடுவது மானிடருட் பலரின் சுபாவமாகும். ஆனால் ஒரு சிலரே தாம் எடுத்த கருமத்தை முற்றிலும் முடிப்பதிற் கண்ணுங்கருத்துமா யிருக்கின்றனர்.

உலக விஷயங்களில் நாம் எந்தத் தொழிலைச் செய்துகொண்டிருந்தாலும் அதில் பற்றிரா வண்ணம் பார்த்துக் கொள்ளவேண்டும். சிலர் சின்னாட்களிங்ஙனம் செய்து வருகின்றனர். அப்பால் சோர்வினால் பழைய மாதிரியே யாய்விடுகின்றனர். ஆதலாற்றான் அவர்கள் எடுத்தகாரியம் நிறைவேறாமற் போய்விடுகிறது. பிறகு அவர்கள் சொல்வது, "இவ்வழிகளிலெல்லாம் முயல்வது சிரம சாத்தியமாகும். நமக்கிவை பயன்படா, யோகிகட்குத்தான் இம்முறைகள் பயன்படும்" என்பதே. ஆனால் இங்ஙனம் சொல்வதில் அவர்கள் கவனிக்கவேண்டிய தொன்றுண்டு. அதாவது, யோகிகட்குத்தான் இம்முறை பயன்படு மென்பதிலிருந்து யோகிகள்தாம் அந்நிலையை தெய்வச் செயலா யடைந்ததாகத் தோன்றுகிறது. அவர்களும் அம்முறைகளில் முயன்றுதான் யோகிகள் ஆனார்களென்றும், தாமும் அம்முறைகளில் பயின்றால் யோகியின் நிலையை யடையலாமென்றும் அவர்கள் உணராத காரணம் ஏதோ அறிகிலேம்.

வைராக்கிய முண்டானல் சம்சார சாகரத்தைக் கடத்தல் எளிதாம்.

---

## தூல, சூக்கும, காரண சரீரங்கள்.

கரசரணுதி அவயவங்களுடன் கண்கட்குப் புலப்படுகின்ற மாம்ச சரீரமே தூலசரீர மென்று சொல்லப்படும். இது பிருதிவியின் பாகமே முக்கியமாக உடையது. அன்னபானுதி ஆகாரங்களே இத்தூல சரீரத்தைச் சிறிதுகாலமேனும் நிலைபெறச்செய்கின்றன. ஆகாரமின்மையினுலிச்சரீரம் சாதாரணமாய்ச் சீரணித்துப் போகின்றது. ஆதலாற்முன் சரீரம் என்னும் பெயரையும் பெற்றது. அன்றியும் தகிக்கப் படுவதனல் தேகமென்றுங் கூறுவர். இதுபோலவே சூட்சும, காரண சரீரங்களும் ஞானக்கினியினல் தகிக்கப்படுகின்றன. இராகத்துவேஷங்களின் சங்கோசத்திலுல் சூட்சும சரீரமும், அபிமானத்தின் சங்கோசத்தினுல் காரண சரீரமும் சீரணித்துப் போகின்றன.

தூல சரீரமானது விசேஷ கர்ம ஜன்னியமாகும். கர்மபலன்களின்படி ஜீவர்கட்குத் தூல சரீரங்கள் எண்ணற் கரியன வாகும். இச் சென்மத்திலுள்ள தூலசரீரம் ஜீரணித்த பின் அக்கினியினுற் றகிப்படுகின்றது. அதற்கப்பால் இத்தூல சரீரம் உண்டாக வழி யாதொன்று மில்லை எனினும் கர்ம வயத்தி

ளுல் ஜீவன் மறு ஜன்மத்தில் இன்னுமொரு தூல சரீரத்தை எடுத்தாள்கின்றுன். ஆகையினுல் தூல சரீரங்க ளனந்தமென்றும், அவை யனைத்துங் கர்மத்தினு லுண்டாவனவே யென்றும் அறிந்து கொள்ளலாம்.

இத்தூல சரீரத்தினுலேயே நாம் முக்தியுடைய வேண்டியவர்களாகின்ருேம். ஆகையினுல் இத்தூல சரீர முண்டாக வேண்டுவது அத்தியாவசியமாகும். அன்றிக் கர்மங்களின் பலன்களை யனுபவித்தற்கும் இத்தூல சரீரம் வேண்டியேதீரும். இன்றேல் சுக துக்கங்கள் எவ்வாற்ருனும் அறியப்படா, பிராரத்த கர்மம் தொலையவேண்டின் இத்தூல சரீரமும் வேண்டற் பாலதாகும். ஆகலின் இத் தூலசரீர மிருக்குங் காலுளவாகும் சுகதுக்கங்கள் யாவும் கர்மபல னென்றே சொல்ல வேண்டும். ஜீவர்கள் தத்தம் கர்மங்களின்படியே சுகதுக்கங்க ளனுபவிக்கிருர்கள் என்பது அறிஞர்களறிந்த வுண்மை யன்ருே! சிற்சில சமயங்களில் சகித்தற்கரியதுக்க மேற்படின் தலைமீது கைவைத்துக்கொண்டு "தலைவிதி தலைவிதி" என்று தீரா அழுகுரல் எழுப்பும் மாந்தர்களன்ருே நாம். ஆனுல் உண்மை உணரின் விதியென்பதுங் கர்மபலனன்றி வேறெதுவுமன்று எனத் தெள்ளிதிற் புலப்படும். ஆதலின் சகித்தற்கரிய துக்கமுண்டாங்கால் விதியை நொந்து கொள்வதை விடத்தம்மை நொந்து கொள்வதன்ருே மேல்!

ஏனெனில், எக்காலத்தும் நாம் பாப கர்மங்களைச் செய்ய முற்படோமாயின் ஏனிந்த விதிவரவேண்டும்? நாம் ஓர் பாபத்தைச் செய்து அதன் பலனை விதியாக்கிக் கொள்கின்றோம். அதற்கப்பால் அவ்விதியை நாம் எளிதில் மாற்றுந் திறனுடையவர்கள் அல்லோம். ஏனெனில் அது இறைவன் விதியாகலின். உலகத்திற் குற்றவாளிகளே தண்டிக்கப் படுகிறார்கள். அவர்கள் குற்றத்தைக்கண்டு அதற்கேற்றபடி தண்டிக்கும்படி அரசன் விதிக்கிறான். அதுவேவிதி என்று சொல்லப்படும். அரசனது விதிப்படி குற்றவாளி தண்டனை அடைந்தே தீர வேண்டும். ஆனால் குற்றமொன்றுஞ் செய்தறியா மானிடர்க்குத் தண்டனை சேர்வதில்லை. ஆகலின் அவர்கட்கு விதியுமில்லை. அதுபோலவே சர்வவல்லமை பெற்ற வீசனும் குற்றவாளிக ளல்லாதாரைத் தண்டிப்பது நியாயமன்று. ஆகையினால் குற்றவாளிகளே விதியின் பயனாகிய தண்டனையை யடைவேண்டியவர்க ளாகின்றார்கள் என்பது அறியற் பாலதேயாம். ஆனால் இக்குற்றவாளிகள் எப்பொழுது எவ்விடத்தில் என் குற்றஞ் செய்தார்க ளென்றும் அக்குற்ற மியாதென்றும் அறியவேண்டும். நாம் இப்பிறப்பில் அனேக பாபங்களைச் செய்தல் கூடும். அவற்றுட் சில பாபங்கள் காரணம்பற்றியும், சில காரணமின்றியுஞ் செய்யப்பட் டிருக்கலாம். ஒரு மாதை யிச்சித்து அவள் தன் ஆருயிரன்ன கணவ

னைக் கொலைசெய்வது காரணம்பற்றிச் செய்யும் பாபமாகும். தற்செயலா யுண்டாகும் சில கொடிய செய்கைகள் காரணமின்றி வருவனவெனல் பொருந்தும். இப்போர்க்கொத்த தீவினைகட்குரித்தான தண்டனையை நாம் இப்பிறப்பில் அடைகிறோம். இத் தண்டனை யீசனுற் கொடுக்கப் படுகிறது. ஆதலின் இதனை மாந்தர் ஈசன் விதியென்கிறார்களே யன்றி வேறன்று. நாம்செய்த பாபங்கட்குத் தக்கவாறு ஈசன் விதிப்பதனுல் நமக்குளதாகும் தண்டனையைப் பெற்றே தீரவேண்டும். ஆதலின் விதியை உண்டுபண்ணுவதற்குக் காரணமா யிருப்பவர்கள் நாமேதான். அதனை யேற்றுக்கொள்வதும் நாமே யாயிருக்கிறோம். ஆனல் நாம் நல்வழியில் நடப்போமாயின் நமக்கியாதொரு கேடுமுண்டாகாதென்பது திண்ணம். நிற்க, இதற்கெல்லாங் காரணம் நமது தூலசரீரமே என்பது இவ்விடத்துக் கவனிக்கத்தக்கது. ஈசனது விதியை யனுபவிக்கவும் தூல சரீர மில்லாவிடில் முடியாமற் போம். ஆனல், இத்தூல சரீரம் ஜீரணமாகுமுன் இனிப் பிறவா வழியை யுணர்ந் தவ்வாறொழுகுவதன்றோ அறிவுடையார் செய்கை?

இத்தூல சரீரத்திற்குள் சூட்சும சரீர மென்றொன்றுண்டெனப் பற்பல நூல்களின் வாயிலாக அறியக் கிடக்கின்றது. ஞானேந்திரிய பஞ்சகமும், கருமேந்திரிய பஞ்சகமும், பிராண பஞ்சகமும், மன

மும், புத்தியுமாகிய பதினேழு அவயவங்களுடன் கூடி யியங்குவதே சூட்சும சரீரம் எனப்படும். இச் சரீரம் உளதோ இலதோ வெனப் பெரும்பாலார்க்கும் ஐய முண்டாதல் கூடும். ஆனல் இவ்வையம் சிறிது ஆராய்ந்துழி நீங்குவதேயாம்.

சூட்சும சரீரத்திற்கு அவயவங்களாகக் கூறியவை பதினேழு. அவற்றுள் ஞானேந்திரியங்கள் ஐந்தெனக் கூறினேம். அவை யாவன, சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்நுவை, ஆக்கிராணம் என்பவையாம். இவை காண்டற்குத் தூல சரீரத்திலிருப்பன போற் காணப்படினும் உண்மை அஃதன்று. இப் பஞ்சேந்திரியங்களும் சூட்சும சரீரத்துடன் சேர்ந்தவைகளேயாம்.

எப்படி யெனில், சத்தங்களைக் கிரகிக்கும் சுரோத்திரேந்திரியம் தூல சரீரத்திற்குள்ளேயே யிருக்கின்றது. தூல சரீரத்திலிருக்கும் நபோதெசம் இந்திரியமன்று; இந்திரியத்தின் கருவியாம். ஏனெனில், சுழுத்தி, மூர்ச்சை மரணம் என்னும் இவ் வவஸ்தைகளில் நபோதெசம் சத்தங்களைக் கேட்கின்றதில்லை. இவ்வாறே இனிக்கூறப்படும் இந்திரியங்களும் தம் தம் தொழில்களைச் செய்வதில்லை. ஆதலின் உண்மையான சுரோத்திரேந்திரியம் நபோதெசத்தை ஆசிரயித்துத் தூல சரீரத்தினுள்ளேயே இருக்கின்றது என்பது நன்கு புலனுகின்றது. அதற்

கதிட்டான தேவதை திக்கு என்பர். அதனது பிரே ரணையால் சுரோத்திரேந்திரியம் சத்தங்களைக் கேட் டுக் கொண்டிருக்கிறது. சீத, ஊஷ்ண, மிருது, கடின மென்னும் பரிசங்களை உணரும் தொக்கிந்திரியம் தொக்கில் வியாபித்துக்கொண்டு தூல சரீரத்தி னுள்ளேயே யிருக்கின்றது. அது தொக்கைப் பரி சித்துக்கொண்டு சிரசினடுவில் இருக்கின்றது. அதற் கதிட்டான தேவதை வாயு. வாயுவினால் பிரேரிக்கப் பட்ட இவ்விந்திரியம் தன் தொழிலைச் சரிவர நடத் திக்கொண்டிருக்கும். ரூபங்களைக் கிரகிக்கும் சட்சு இந்திரியம் சிரசினடுவில் குவளை முன்னிலையிற் கரு விழியை ஆசிரயித்துக் கொண்டிருக்கும். அது தனது அதிஷ்டான தேவதையாகிய சூரியனால் ஏவப்பட்டுத் தன்றொழிலை முறைப்படி செய்து கொண்டிருக் கும். இரசத்தை யறிகின்ற சிங்நுவை இந்திரியம் நுனிநாவை யாசிரயித்துக்கொண்டு கபால நடுவில் இருக்கும். அதிட்டான தேவதை வருணன். அத் தேவதையா லேவப்படத் தனது தொழிலை அவ் விந்திரியம் முறைப்படி செய்துகொண்டிருக்கும். கந் தத்தைக் கிரகிக்கும் ஆக்கிராணேந்திரியம் கபாலத்தி னின்று மிரண்டு கவராய் மூக்கின்தண் டெலும்பைப் பற்றி நுனிமூக்கை ஆசிரயித்துக்கொண்டிருக்கும். அதிஷ்டான தேவதையாகிய அசுவினியால் ஏவப் பட்ட அவ்விந்திரியம் கந்தத்தைக் கிரகித்துக்கொண் டிருக்கும்.

ஞானேந்திரியங்களைப் போலவே கருமேந்திரியங்களும் தூல சரீரத்தினுள் ளிருக்கின்றன. வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னும் ஐந்தும் கருமேந்திரியங்களாகும்.

வசனிக்கும் வாக்கிந்திரியம் மூகாரவிந்தத்திலிருந்து நுனிநா, தாலுமூலம், மேலுதடு, கீழுதடு, பல், கண்டம், இருதயம், பிரம ரந்திரமென்னும் தானங்கள் எட்டினையு மாசிரயித்துக் கொண்டிருக்கும். அக்கினி அதற் கதிஷ்டான தேவதையாகும். கமனாதி கிரியைகளைச் செய்யும் பாதேந்திரியம் மூகாரவிந்தத்திலிருந்து இரண்டு கவாய் உள்ளங் காலை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற் கதிஷ்டான தேவதை உபேந்திரன். இடுதலும் ஏற்றலும் செய்கின்ற பாணீந்திரியம் மூகாரவிந்தத்தில் உள்ளங் கையை ஆசிரயித்துக் கொண்டிருக்கும். அதிஷ்டான தேவதை இந்திரன். மல விசர்க்கத்தைச் செய்யும் பாயுரிந்திரியம் குதத்தை யாசிரயித்துக் கொண்டு மூகாரவிந்தத்தில் இருக்கும். அதற் கதிஷ்டான தேவதை மிருத்திபுவாகும். ஆனந்திக்கும் உபஸ்தமானது யோனி லிங்கங்களை ஆசிரயித்துக்கொண்டு மூகாரவிந்தத்தில் இருக்கும். அதற் கதிஷ்டான தேவதை பிரஜாபதி. ஞானேந்திரியங்களைப் போலவே கருமேந்திரியங்களும் தத்தம் அதிஷ்டான தேவதைகளால் ஏவப்பட்டுக் கிரியைகளைச் செய்யாநிற்கும்.

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்பவை பஞ்சப் பிராணன்களாம்.

அவற்றுள் உசுவாசம் பண்ணுகிற்றது பிராணன் என்பதேயாம். அதற்குத் தானம் இருதயம்; அதிட்டானதேவதை விசிட்டன். அதிட்டான தேவதையினு லேவப்பட்ட பிராணன் உசுவாசித்துக் கொண்டிருக்கும். அபானவாயு நிசுவாசம் பண்ணிக்கொண்டிருக்கும். அதற்குத் தானம் குதம்; அதிஷ்டான தேவதை விசுவகர்த்தா. இதனுல் ஏவப்பட்ட அபானன் நிசுவாசம் செய்துகொண்டிருக்கும். சரீரமுழுதும் வியாபித்துக்கொண்டிருக்கிற வியானன் வாயு அச்சரீரத்தைப் பலமுறச் செய்வதுமன்றி இந்திரியங்கட்குப் பலனையும் கொடுக்கும்; அதற் கதிஷ்டான தேவதை விசுவயோனி. இதனுலேவப்பட்ட வியானன் தன் தொழிலைச்செய்து கொண்டிருக்கும். சுழுத்தியிற் சகல இந்திரியங்களையு மொடுக்கி, அஞ்ஞானத்தில் லயிக்கச்செய்வது உதானவாயுவாகும். அங்ஙனம் லயிக்கச் செய்தாலும் சாக்கிராவஸ்தையில் அவ்விந்திரியங்களை யெல்லாம் தத்தம் தானங்களில் நிறுத்திவிடும் சக்தி அதற்குண்டு. மரணகாலத்தில் சகலவிந்திரியங்களையும் ஒடுக்கிக்கொண்டு லோகாந்தரத்திற்குப் போவதும் அதுவே. அதற்கு ஸ்தானம் கண்டமும், அதிஷ்டான தேவதை பிரமதேவனுமாம். அதிட்டான தேவதையின் ஏவுதலினுலே அது தன்

தொழில்களை நடத்திக்கொண்டிருக்கும். புசிக்கும் ஆகாரத்தைச் சாடராக்கினியோடு கூடி உபசமனம் செய்வது சமானன் என்னும் வாயு. அதற்குத்தானம் நாபி; க்ஷயன் அதிஷ்டானதேவதை. அதிஷ்டான தேவதையின் பிரேரணையால் அது தன்தொழிலை செய்துகொண்டிருக்கும்.

சங்கற்ப விகற்பங்களைச் செய்வது மனமாகும். அது கண்டத்தின் கீழிருக்கும். அதற்கதிட்டான தேவதை சந்திரன். அவ்வதிட்டான தேவதையினு லேவப்பட்ட மனம் தன்தொழில்களைச் செய்யா நிற்கும்.

மனம் நினைத்தவற்றை நிச்சயிப்பது புத்தி. அது முகத்தில் இருக்கும். அதிஷ்டான தேவதை யாகிய சதுர்முகனு லேவப்பட்ட புத்தி நிச்சயித்துக்கொண் டிருக்கும்.

மேற்கூறிய பதினேழு அவயவங்களுடன் கூடிய சூட்சும சரீரமே சகல தொழில்களையுஞ் செய்யா நிற்கும். ஒரு வஸ்துவைப் பார்க்கவேண்டுமானல் ஸ்தூல தேகத்தில் இருக்குங்கண் என்னுங் கருவியும், அதற்குப் பின்னுள்ள இந்திரியமும், மனமும் வேண் டும். அங்ஙனமின்றேல் சூட்சும சரீரம் இயங்காது. கண்ணென்னும் கருவியும் இந்திரியமுஞ் சேர்ந்தா லும் ஒரு வஸ்துவைப் பார்க்க முடியாது. அத் துடனே மனமும் வேண்டும். மனமும் இந்திரிய

மும் இருக்கினும் கண்ணெனுங் கருவி யின்றேல், அவற்ருற் பிரயோஜன் மிராது. ஆகையினுல் இம் மூன்றும் இன்றியமையாதன வாகும். இவ்விதமே தான் ஏனை இந்திரிய விஷயங்களிலும் உணர வேண்டும். சூட்சும சரீரம் தூல சரீரத்துட னியைந்தே இயங்குகின்றது.

நிற்க, தூல சூட்சும சரீரங்கட்கு அன்னியமாக ஓர் சரீர முளது. அதுவே காரண சரீரம். அக்காரண சரீரம் எது வென்ருல் அஞ்ஞானமேயாம். புகை உண்டாகு மிடத்தில் இயல்பாகவே அக்கினி யிருத்தல் வேண்டுமென்று நிச்சயிப்பது போன்று தூல சூட்சும சரீரங்கட்குக் காரணமாக ஓர் சரீரம் இருத்தல் வேண்டுமென்று துணிதல் வேண்டும். ஏனெனில் காரணமின்றிக் காரிய முண்டாவது யாண்டுங் காண்கின்றிலம். இக்காரண சரீரம் அஞ்ஞான வடிவே யன்றி மற்றியாது மன்று.

இக்காரண சரீரமே சகல துன்பங்கட்குங் காரணமென்றறிதல் வேண்டும். அஞ்ஞானம் நீங்கா விடத்து முக்தியின்று. அஞ்ஞானத்திற் குறைவிட மாகிய காரண சரீரம் நசித்தாலன்றி அஞ்ஞானம் நீங்குமாறில்லை. அஞ்ஞானம் அவிவேகத்தை எழுப்பும். அவ்வவிவேகத்தினுல் அபிமானமும், அபிமானத்தால் காமக் குரோதாதி தோடங்களு முண்டாம். அதனுற் சீவாத்மா கருமத்தை விருத்திசெய்து, அக்கரும

வயத்தால் ஜனன மரணங்களை யடைந்துகொண்டிருக்கும். இத்துணைத் துன்பங்கட்கும் காரணம் காரண சரீரமேயாம்.

---

## விக்கிரக ஆராதனை.

“ ஒன்றாயும் பலவாயும் உருவாயு மருவாயும்
குன்றாயு மணுவாயுங் குணமாயுங் குணியாயும்
நன்றாயுந் தீதாயும் நானாயும் தானாயும்
இன்றாயு முளதாயு மிருக்குமந்தப் பரமசிவம் ”

என்பதனாற் கடவுளது இலக்கணமறியக் கிடக்கின்றது. யார் யார் எவ்வெவ்விதங்களி லுபாசிக்கின்றனரோ, அவ்வவ்விதங்களிற் காட்சிகொடுப்பது சர்வ வல்லமைபெற்ற ஈசனது குணமாகும். எனினும் முதன் முதல் விக்கிரகத்தின் மூலமாக உபாசனை செய்து பழகிய பின்னரே நிர்க்குணோ பாசனைக்குச் செல்லவேண்டும். முதன் முதலாகவே நிர்க்குணோ பாசனை செய்யத் துவங்கிடின் மனமொருப்படாது. எனவே முதன் முதல் சகுணோ பாசனையிற்றான் பழக வேண்டும்.

விக்கிரகத்தின் மூலம் கதிபெற லரிதென நினைப்பது பெருந்தவறே யாகும். விக்கிரகம் கேவலம் பதுமையன்று. பரமாத்மாவின் சத்தியானது விக்கிரகத்தினுட் பிரவேசிக்கும்படி செய்யப்பட் டிருப்பதால்

அதன்மூலம் நாம் நற்கதி பெறுவது திண்ணமேயாம். அன்றியும் நம்பிக்கையினல் விக்கிரகம் கடவுளின் சக்தியைப் பெறுகிறது. ஆதலின் சாதாரண பது மைக்கும் விக்கிரகத்திற்கும் மிகுந்த வேற்றுமை யுளது. அஃதறியாது ஆலயங்களிலுள்ள தெய்வாம் சம் பொருந்திய விக்கிரகங்களையும் கேவலம் பதுமை கள் எனக்கொள்வது அறிவிலிகள் செய்கையே.

விக்கிரகங்களினல் அனேக நன்மையுண்டு. ரூப மில்லாத எதையுஞ் சிந்திப்பது எளிதன்று. ஆகை யினற்றான் விக்கிர ஆராதனை விதிக்கப்பட்டுளது. விக்கிரக பூஜை இருவகைப்படும். அவையாவன, ஆன்மார்த்தம் பரார்த்தம் என்பனவாம். ஆன்ம பூஜைசெய்ய நினைத்தவன் ஒருபிம்பத்தைத் தானகவே பிரதிஷ்டைசெய்து வழிபடுதல்முறை. தன்மனத்தை ஓர் நிலையில் நிறுத்தி அபிஷேகாதிகளைத் தானே செய்யவேண்டும் என்பது விதி. அபிஷேக பாத்தி ரத்தை முன்வைத்து அதில் நீர் நிரம்பச்செய்து சந் தன புஷ்பாக்ஷதைகளைத் தூவி அதன்மீது கையை வைத்துத் தன் சக்தியை யதனுட் செலுத்தவேண்டும். ஏனெனில் அத்தீர்த்தமே அபிஷேகஞ் செய்வதற் குரியதாம். இஃதன்றியும், ஐந்து கலசங்களில் நீர் நிரப்பிப் பத்திர புட்பாக்ஷதைகளால் பூஜித்து வைக்கவேண்டும். அப்பால் உபாசன மூர்த்திக்குரிய மந்திரத்தை உச்சரித்துப் பரம்பொருளைத் தியானிக்க வேண்டும். பிறகு ஆவாஹனம் செய்யவேண்டும்.

அச்சமயம் துளசி, வில்வம் முதலிய தழைகளைக் கையிலெடுத்து இதயம் முதல் சிரசுவரையிலும் மேனேக்காய்ப் பாவித்து, அத்தழைகளின் மூலம் தன்னிடத் தாவிர்ப்பவித்திருக்குஞ் சக்தியைப் பிம்பத்திற் செலுத்திக்கையாற் பரிசித்து, இருவிழிகளாலும் பிம்பத்தைப் பார்க்கவேண்டும். இங்ஙனஞ் செய்யின் தெய்வீக சக்தி பிம்பத்தின் கண்ணுண்டாகும். இச்சக்தி இதய கமலத்துள்ள மலினங்களுடன் வந்திருக்கு மாதலின், முன்னர்ப் பூசித்து வைத்திருக்கும் தீர்த்தத்தால் அபிஷேகஞ் செய்யவேண்டும். பிறகு, முன் பூசித்துவைத்திருக்கும் பஞ்சகலச நீரால் அபிஷேகம்செய்து ஈரம் நீங்கத் துடைத்து பருத்தி நூலாற் செய்யப்பட்ட வஸ்திரங்களைச் சாத்தி சந்தனமிட்டு பத்திர புட்பங்களால் அர்ச்சனை புரியவேண்டும். ஆனல் அணியும் வஸ்திரங்கள் பிறராற் பரிசிக்கப்பட்டனவா யிருத்தல்கூடாது. அப்பால், பூஜைக்கெனச் சமைக்கப்பட்டவற்றை நைவேத்தியஞ் செய்து கற்பூராரத்திகாட்டி பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்யவேண்டும். பின்னர் ஸ்தோத்திரம்செய்ய வேண்டும். இதுவே ஆன்மார்த்த பூஜையென்று சொல்லப்படும். இதனல் விளையும் நன்மை அளவிடற்பாலதன்று.

இனிப் பரார்த்த பூஜையைப்பற்றிக் கவனிப்பாம். பரார்த்த பூஜை என்பது அடக்கமாகச் செய்யப்படா

மல் எல்லோர்க்கும் பயன்படும்பொருட்டு ஆலயங்களில் விதிப்படி செய்வது. இதனால் மிகுந்த நன்மையேற்படுதல் வெளிப்படையேயாம். ஆலயத்திற் ருபிக்கப்பட்ட பிம்பத்தின் பெருமை அளவிடுதற்கரிது. ஆலயங்களும் நம்முன்னோர்கள் விதிப்படி கட்டியனவாகும். அது பரமாத்மாவிற்குச் சரீரம் போன்றது. நம் சரீரத்திலுள்ள ஆருதாரங்கட்குப் பதிலாகவே ஆலயத்தில் கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், ஸ்நபனமண்டபம், மஹாமண்டபம், பூர்வவேதி, சபாமண்டபம் என்னும் ஆறுதலங்களும் அமைக்கப் பட்டுள்ளன. ஆலயத்தின் இதய ஸ்தானத்தில் கடவுளாராதனை செய்யப்படும். ஆதலின் ஆலயத்தின்கண்ணுள்ள விக்கிரகம் கடவுளுக்குச் சமானமேயாம். சங்கற்ப விகற்பங்களையுடைய மனம் ஒரு நிமிடமாகிலும் நிலையில் நிற்க வேண்டுமாகில், முதன் முதலாக விக்கிரகத்தையே தெய்வமாகப் பூஜிக்க வேண்டும். விக்கிரக ஆராதனையிற் பழகிய பின்னரே விக்கிரக மின்றித் தியானிக்க முடியும். அதற்காகவே ஆலயங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. ஆலயங்களிற் புகும்பொழுது அகங்காராதி குணங்களைப் பலி பீடத்திற் பலியிட்டு விடவேண்டும். பிறகு உட்சென்று மூர்த்தியை ஒருமனதாய்த் தியானிக்கவேண்டும். துன்பமென்னும் சம்சார சாகரத்தினின்றும் கரை சேர்வதற்கு இவ்விக்கிரக ஆராதனை ஒன்றே போதுமானதா யிருக்கின்றது.

---

## பரமாத்மா, ஜீவன், ஜகத் இவற்றின் உண்மை.

பரமாத்மா சத்யப்பொருள். அதுவே ஜகத் காரணம். பந்தமற்றது, இதனை
"அமலமா யழியாப் பரம்பொருள் பந்த முற்றிடுமோ"
என்பதனாலறிக.

பரமாத்மாவின் பிரகாசமே ஜீவன் எனப்படும். இதனை,

"அதனுக்கிணையாய்ப் புகலரிதா
அகன்று நிறைந்தாழ்ந்த மலமதாய்ச்
சதமதறிந் தோர்களு மியல்பு
சாற்றற்கரிதாய்ச் சாந்தமதாய்த்
திதமுற்றசையாக் கடலென்னத்
தீபமென்னத் திகழ்கின்ற
முதன்மை பிரமத்தொளி தானே
முடிவில் பரமாகிய சீவன்"

(ஞானவாசிட்டம்)

என்பதனாலறிக. இவன் கர்மபந்தத்தால் பிறப் பிறப்புக்கள் என்னும் பெரும் பரவையுளு ழல்கின்றான். பரமாத்மாவின் தோற்றமே ஜகத் எனப்படும். ஜகத் பிரம கற்பிதம் என்பதை,

"எல்லையிற் றிசைகள் காலம் புறம் பெறு
மிவற்றிற் கேற்ற
பல்லுரு வாயெங் கெவ்வா றெழுந்ததப்
படியங்காகும்

செல்லுமிந் நெறியா லிந்தச்
செகமெனும் பிரம கற்பம்
புல்லுகா ரணமிலாத பொருளெனப்
புந்தி செய்க," (ஞானவாசிட்டம்)

என்னுஞ் செய்யுளாலுணர்க. அன்றியும் அவ்வாறு பிரம கற்பிதமாயிருக்கினும் அத்துவிதம் சித்தித்தலு மாராய்ந்தறிக.

மேற்காட்டிய மூன்றனுள் ஜீவன் பரமாத்மாவி னின்றும் உற்பத்தியானமையான் அப்பரமாத்மாவை யே யடைதற்கு நற்றருணம் நோக்கிக்கொண்டிருக் கின்றது. தனது யதார்த்த சுவரூபத்தை உணர்ந்த வுடன் ஜீவன் திரும்பவும் பரமாத்மாவுடன் ஐக்கிய மாய்விடும். பரமாத்மாவுடன் ஜீவன் லயமாகிவிட் டால் சேடிப்பது பரமாத்மா ஒன்றே. பரமாத்மா வை அடைந்த ஜீவன் திரும்பவும் பிறப்பதில்லை.

இத் தனிப்பெரும்பேற்றை யுடைதற்கே மானிட ஜன்மம் விதிக்கப்பட்டுள்ளது. ஆதலின் இச்சன்மத் தையடைந்தும் ஆத்மஞானமடைய முயற்சிக்காத வன் உண்மையில் ஆத்மஹத்தி செய்பவனே யாகின் றான். துவேஷபுத்தி நீங்கினாலன்றி ஆத்மஞானம் சித்திக்காது என்பது திண்ணம். ஆத்மாவில் சர்வ பூதங்களையும் சர்வபூதங்களில் ஆத்மாவையும் பார்ப்ப வனுக்கு ஒருபோதும் துவேஷபுத்தி உண்டாவதில்லை. பிறர் தூஷித்தவிடத்தும் அத்தூஷணை சரீரத்திற்கே யன்றி ஆத்மாவிற் கில்லையென்று நினைக்கவேண்டும்.

முமுட்சுக்கள் சரீரத்தைத் தாமே தூஷிப்பவராகலின் பிறர் தூஷணையைக் கேட்கின் மகிழ்ச்சியே எய்துவர். அவர்கட்குச் சுற்றத்தாரும் ஏனையோரும் வேறன்று. எல்லாஜீவ ராசிகளிடத்தும் கருணை பாராட்டி இன்ப மடையாநிற்பர். உலகம் தென்பட்ட போதிலும் முமுட்சுக்கட்குக் கானனீரெனப் பொய்யே யாம். இகத்தின் பாலதாய சிற்றின்பத்தை வெறுத்துப் பரத்தின் பாலதாம் பேரின்பத்தை விரும்பி இருப் பவர் முமுட்சுக்களே. ஒவ்வொருவரும் முமுட்சுவாவ தே மானிட சென்மத்தின் பயனுமாகும்.

---

## எக்ஞம்.

உலகத்திற் பிறந்த நாள்முதற் கொண்டே ஜீவர் கள் துன்ப மனுபவித்து வருகின்றனர். சின்னேர மாயினும் மனவமைதியோடு இருப்பது அசாத்திய மாகின்றது. அதிலும் சம்சாரிகட்குத் துன்பம் மலை போல வருகின்றது. அவர்கட்குண்டாகும் இன்பம் அணுவளவேனும் இருக்கு மென்று சொல்வதற்கு நாவெழாது. அன்றியும் தாம் எத்துணை சீவகாருண்ய முடையவர்களா யிருக்கினும் பஞ்ச சூனு தோஷங்க ளால் சம்சாரிகள் பாபத்தைச் சம்பாதித்துக் கொள் கிறார்கள். இந்நிலையில் அவர்கள் எங்ஙனம் முக்தி யடைதல் கூடும். கர்மசேஷம் இல்லாமற்போனல் அன்றோ முத்தியுண்டாம். ஆதலால் உலக்கை, உரல், அம்மி முதலியவற்றை உபயோகிப்பதனு லுண்டாம்

பஞ்ச சூன தோஷங்கள் ஒழிவதற்குத் தகுந்த பிரயா சைபெடுக்க எல்லோருங் கடமைப்பட் டிருக்கிறார்கள்.

பஞ்ச சூன தோஷங்கள் பஞ்சஎக்ஞங்களைச் செய்வதனால் அகலும். பிரமஎக்ஞம், பிதுருஎக்ஞம், தேவஎக்ஞம், பூதஎக்ஞம், மனுஷஎக்ஞம் என்பன பஞ்ச எக்ஞங்களாம். இவற்றுள், நாடோறும் வேதாத்தியயனம் செய்வது பிரம்ம எக்ஞம் எனவும், பிதுரு தேவதைகட்குத் தர்ப்பணம்விட்டுத் திருப்திப் படுத்துவது பிதுரு எக்ஞம் எனவும், அக்கினியில் ஓமம் செய்வது தேவஎக்ஞம் எனவும், ஜந்துக்கட்குப் பலியிடுவது பூதஎக்ஞ மெனவும், விருந்தினர்கட்குப் போஜனமளிப்பது மனுஷ்யஎக்ஞம் எனவும்படும். அன்றியும் உண்ணத்தகுந்த எப்பொருளையும் கடவுளுக் கர்ப்பணம் செய்வதும், எக்ஞத்தின் பாற்படும். வீட்டில்வாழும் பூனை, நாய்முதலிய ஜந்துக்கட்கும் இயன்றவாறு அன்னமிடுதல் வேண்டும்.

மேற் கூறியபடி வழுவாமற் செய்கிறவர்கள் கடவுளுக்குப் பிரீதி உடையவர்களாகிறார்கள். எப்பொழுது ஈசனது கருணைக்கு இலக்கானார்களோ அப்பொழுதே பிறப்பு என்னும் பிணிக்கு ஔடதங் கிடைத்தது என்றே சொல்லவேண்டும். எக்ஞங்களைச் செய்வதால் தேவதைகளும் பிரீதியடைந்து தத்தம் கடமைகளைச் சரிவரச் செய்தல் கூடும். மனம் சுத்தத் தன்மையை அடைகின்றது. எப்பொருளையும் ஈசுரார்ப்பணஞ் செய்து பின்னருட் கொள்வத

ணுல் அனேக நன்மைகளுள. பிணிகள் வந்தடையா மையும் சரீரத்திலிருக்கும் பலவித பிணிகள் நாச முறுதலும் அதனுல் உண்டாகும் நன்மைகளாம். கடவுளால் அளிக்கப்பட்ட பொருள்களை அவர்க் கர்ப்பணஞ் செய்யாது அனுபவித்தல் கிஞ்சிற்றும் நியாயமாமா? ஆதலால் எப்பொருளும் கடவுளுக் கர்ப்பிக்கப்படல் வேண்டும். அர்ப்பிக்கப்படாதவற் றை யனுபவிப்பது நன்றிகொன்ற பாவத்தைத் தருவ தாயிருக்கின்றது.

BHEA

---

## தாபத்திரயம்.

நாம் நமக்குண்டாகும் துன்பங்களை நன்குணர் ந்து அவைகள் தேகேந்திரியங்கட்கன்றி சர்வ சாக்ஷி யாகிய வாத்மாவுக்கில்லை யென்று தெளிவோமாயின் மாயை நம்மைக் கட்டுப்படுத்தா தென்பது திண்ணம். எங்ஙனம் வாராநின்ற துக்கங்கள்யாவும் ஆத்மா விற்கு இல்லையோ அங்ஙனமே சகல சுகங்களும் ஆத்மாவிற்கில்லை. இவ்வுண்மை யறிந்தாலன்றே பற் றறவாழ்தல் கூடும்! உலகம் எப்பொழுதும் சுகத்தை விரும்பியும் துக்கத்தை வெறுத்தும் வருகின்றது. அன்றியும் சுகதுக்கங்களைச் சமமாகப் பாவிக்காது சுகம் வரும்பொழுது ஆடிப்பாடிக் களித்தும் துக்கம் வருங்கால் மிகவும் சோர்வடைந்தும் தன்னுண்மை நிலையறியாது மயங்குகின்றது. எத்தகைய துன்பங் கள் உண்டானபோதிலும் பொருட்படுத்தா திருத்தல்

வேண்டும். நமக்குண்டாகும் துக்கங்கள் ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி தெய்விகம் என மூவகையாம். தாபத்திரயம் என்றாலும் பொருந்தும்.

சரீரத்திலுண்டாகும் வியாதிகளும் மக்கள், மிருகங்கள், பேய்கள், இராக்ஷதர்கள் முதலானவர்களாலுண்டாகும் பாதைகளும் ஆதியாத்மிகம் என்று சொல்லப்படும். வெய்யில், மழை, காற்று, ஆலயங்கள், மாளிகைகள் முதலியவற்றா லுண்டாகும் துக்கங்கள் ஆதிபௌதிகம் ஆகும். ஜனனம், நரை, திரை, மரணம் முதலிய துக்கங்கள் ஆதி தெய்விகத்தின் பாற்படும்.

உலகத்திற் பிறந்தபோதே நாம் வினையை விலை கொடுத்து வாங்கியவர்களாகின்றோம். பிறந்ததானாற் குற்றமில்லை யெனின் சுகதுக்கங்கள் சூழ்ந்துகொண்டு நம்மைப் பரிதாபமுறச் செய்கின்றனவே. அதையும் சிறிது நாட்கள் பொறுத்துக் கொள்ளலாமென்றால் கர்மத்தினால் பின்னும் பின்னும் ஜனன மெடுக்க நேருகின்றதே. நமது வேலையே பிறப்பதும் இறப்பதுந் தானா? இவ்வேலைக்கோ ரொழிவின்றே! நம் முயற்சியால் தப்பித்துக் கொள்ளலாமேயன்றி வேறுவழியில் இவ்வேலையை விட்டகல்தல் சாத்தியமன்று. ஆதலால் சுகதுக்கங்களைச் சமமாகப் பாவித்துப் பற்றின்றி ஈசன்திருவடியை நாடுவோமாக.

---

## பஞ்சகோச விளக்கம்.

ஒரு காரியசித்திக்காக முயலும்பொழுது பற்பல விக்கினங்கள் ஏற்படுவது இயற்கையே. ஆனால் அவ் விக்கினங்களை நன்குணர்ந்து அப்பால் அவைகளை நீக்கி நினைத்த காரியத்தைச் செவ்வனே நிறைவேற்று வதுதான் முறையேயன்றி அத்துடனே விட்டுவிடு வது நியாயமல்ல. அஃதேபோல் ஆத்மாவை அறியப் புகுந்தவர்களும் விக்கினங்களை நீக்கி வைராக்கியத் தோடு முயற்சித்தல் வேண்டும். ஆத்மாவோ எளிதில் அறிந்துகொள்ளத் தக்கதல்ல வென்பதை எல்லோ ரும் உணர்ந்திருக்கிறார்கள். ஆத்மாவை மறைத்து அதனைப்போல் வேடம் புனைந்துகொண்டு நம்மை ஏமாற்ற முயற்சிப்பவை சிலவுள. பஞ்சகோசங்கள் அவற்றுள் முக்கியமானவை. ஆதலால் ஆத்மாவை மறைக்கும் இவற்றைப்பற்றிச் சிறிது அறிந்துகொள் வது அவசிய மாகின்றது.

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ் ஞானமயம், ஆனந்தமயம் என்பன பஞ்சகோசங் களாம். இக்கோசங்களுடன் சேர்ந்திருக்கும் ஆத் மாவை இவைகள் மறைத்துக் கொள்வதனால் கோசங் களாயின. இக்கோசங்கள் ஆத்மசத்தாவை யனுசரண மாகக் கொண்டு பிரகாசிக்கின்றனவே யன்றித் தமது சத்தா மாத்திரத்தினால் பிரகாசிப்பவை யன்று. ஆயி னும், சூரிய கிரணங்களினால் உண்டாகிய மேகங்கள் சூரியனை மூடிக்கொள்வது போலும், அக்கினியினு

லுண்டாகிய புகை யவ்வக்கினியை மூடிக்கொள்வது போலும், பழுதையின் சத்தையை யுபஜீவித்துக் கொண்டே தோற்றப்பட்ட பாம்பு அப்பழுதையை மூடிக்கொள்வது போலும், மண்ணின் சத்தையே யுப ஜீவித்துக்கொண்டு தோற்றப்பட்ட கடம் அம் மண்ணை மூடிக்கொள்வது போலும் அப்பஞ்சகோசங் கள் ஆத்மாவை மூடிக்கொள்கின்றன.

பஞ்ச கோசங்களுள் அன்னமய கோசமென்பது அன்னத்தினு லுற்பத்தியாய்த் தூண்போல் தூலமாய்க் கைகால்கள் முதலிய உறுப்புக்களை யுடைத்தாய்ச் சட் பாவ விகார மத்தாய்த் தோன்றப்படுகிற சரீரமேயாம். அன்னியோன்னிய அத்தியாசத்தினுல் ஆத்மாவுக்கும் பஞ்சகோசங்கட்குங் சேர்க்கையுண்டு. ஒரு பொரு ளின் தன்மை மற்ருெரு பொருளிற் ருேன்றுவதற்கே அன்னியோன்னிய அத்தியாசயென்பது. எனவே அன்னமய கோசத்திற்கும் ஆத்மாவுக்கும் ஜீவித்து' வாரா, ஜாதித்துவாரா, விகாரத்துவாரா, அங்கத்து வாரா, வர்ணத்துவாரா, ஆசிரமத்துவாரா, நாமத்து வாரா சமஸ்காரத்துவாரா, வேஷத்துவாரா, கிரியாத் துவாரா கூட்டரவு வந்தது. எப்படியெனில், 'நான் ஜீவன்' என்பது ஜீவாத்தியாசம் ; 'நான் பிறந்தேன்' வளர்ந்தேன், இளைத்தேன், மரிக்கின்றேன்' என் பது விகாராத்தியாசம் ; 'நான் புருஷன், நான் ஸ்திரீ' என்பது அங்கவத்தியாசம் ; 'நான் பிராமணன், க்ஷத் திரியன்' என்பது வர்ணத்தியாசம் ; 'நான் தமிழன்

தெலுங்கன், நான் காசிபகோத்திரன், பாரத்துவாச கோத்திரன்' என்பது விசேஷ ஜாதி யத்தியாசம்; 'நான் பிரமசாரி, கிரகஸ்தன்' என்பது ஆசிரம அத்தியாசம்; 'நான் தேசிகன், இராமன்' என்பது நாமாத்தியாசம்; 'நான் தீக்ஷிதன், சோமயாகி' என்பது சமஸ்கார வத்தியாசம்; 'நான் பாகவதன், புராணிகள், யோகீசுவரன்' என்பது வேஷவத்தியாசம்; 'நான் உபாத்தியாயன், சீடன், ஞானி, தச்சன், கருமான்' என்பது கிரியாத்தியாசம். மேற்கூறப்பட்டதிலிருந்து ஆத்மாவிற்கும் அன்னமய கோசத்திற்கு முண்டான மித்தியாத்தியாசக் கூட்டரவு அறியக்கிடக்கின்றது.

பிராண மயகோச மென்பது வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்றும் கருமேந்திரிய பஞ்சகமும், பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன் என்னும் பிராணாதி பஞ்சகமும் கூடியதாகும். "நான் பசியுடையவன், தாகமுடையவன், பலமுடையவன், ஊனம், மூடவன், சிதடன்" என்னும் இவையும் இவைபோல்வனவுமாகிய பிராண மயகோச தருமங்கள் ஆத்ம சுபாவமாகவும், ஆத்ம சுபாவமாகிய சச்சிதானந்த குணங்கள் பிராணமய சுபாவமாகவும் தோற்றுவதனால் ஆத்மாவிற்கும் பிராணமய கோசத்திற்கும் கூட்டரவு உண்டென்பது விளங்குகின்றது.

மனமும் ஞானேந்திரிய பஞ்சகமும் சேர்ந்தது மனோமய கோசமென்று சொல்லப்படும். 'நான் சங்கற்ப முடையவன், விகற்பமுடையவன், இச்சை யுடையவன்' என்றும் இவைமுதலாகிய மனோமய கோச தருமங்கள் ஆத்ம சுபாவமாகவும் ஆத்ம தரு மங்களாகிய சச்சிதானந்தங்கள் மனோமய சுபாவமாக வும் தோற்றுவதனால் ஆத்மாவிற்கும் மனோமய கோசத்திற்கும் சேர்க்கை யுண்டாயிற்று.

புத்தியும் ஞானேந்திரிய பஞ்சகமும் கூடியது விஞ்ஞான மயகோச மெனப்படும். 'நான் கர்த்தா, புத்தியுடையவன், யோகசாதகன், பண்டிதன், பக்தி யுடையவன்' என்னும் இவை முதலாகிய விஞ்ஞான மய கோச தருமங்கள் ஆத்ம சுபாவ மாகவும், ஆத்ம தருமங்களான சச்சிதானங்கள் விஞ்ஞானமய கோச சுபாவமாகவும் தோற்றுவதனால் ஆத்மாவுக்கும் விஞ் ஞானமய கோசத்திற்கும் சம்பந்தமுண்டு.

பிரியம், மோதம், பிரமோதமென்னும் விருத்தி மத்தாய்ப் பிரதானமாகிய அஞ்ஞானமே ஆனந்தமய கோசமென்று சொல்லப்படும். இஷ்டமான பொரு ளைக்கண்டபோதுண்டாகுஞ் சந்தோஷத்திற்குப் பிரி யம் என்றும், அது கிடைத்தபோதுண்டாகும் சந் தோஷத்திற்கு மோதமென்றும், அதனை யனுபவித்த தும் உண்டாகின்ற சந்தோஷத்திற்குப் பிரமோத

மென்றும் அறிஞர் கூறுவர். 'நான் போக்தன், சந்தோஷமுடையவன், சாத்துவிகன், விவேகி, சடன், பிராந்தியை யுடையவன்' என்னும் இவை முதலாகிய ஆனந்தமய கோச தருமங்கள் ஆத்மாவினிடத்தும் ஆத்ம தருமங்களான சச்சிதானந்தங்கள் ஆனந்தமய கோச தருமங்களாகவுந் தோன்றுவதால் ஆத்மாவிற்கும் ஆனந்தமய கோசத்திற்குங் கூட்டரவுண்டாயிற்று.

இப்பஞ்சகோச தருமங்கள் சாட்சியாகிய ஆத்மாவிற்கில்லை யென்று திடமாயறிகிறதே பஞ்சகோச வெதிருத்தி ஞானம் என்று சொல்லப்படும். கத்தியும் உறையும் ஒன்ருய்த் தோன்றினும் உண்மையில் கத்தி வேறு உறை வேருவதுபோல் பஞ்சகோசங்களினின்றும் ஆத்துமா வேறுபட்டதாகும். என் பசு, என் கன்று, என் மனைவி, என் புதல்வன், என்று கூறினும் உண்மையில் அங்ஙனங் கூறுவோன் அவைகட்கு வேருவது பிரத்தியக்ஷம். அதுபோல என் சரீரம், என் பிராணன், என் மனது, என் புத்தி, என் அஞ்ஞானம் எனத் தன்னைச் சம்பந்தித்துச் சொல்லும் பஞ்சகோசங்களி னின்றும் ஆத்மா வேருயிருக்கின்ருன். அஃதன்றியும் பசு இளைத்துவிட்டதென்ருவது, மனைவி துர்க்குணமுடையவ ளென்ருவது, புதல்வன் புத்திமா னென்ருவது கூறும்பொழுது மேற் சொல்லிய பொருள்களின் தன்மை

கூறுவோனைப் பற்றுவதில்லை. அதுபோலவே அன்ன மயகோச லக்ஷணமான ஜாதி, ரூப, நாமாதிவி காரங் களும், பிராணமயகோச லக்ஷணமான பசி, தாகம் முதலிய விகாரங்களும், மனோமய கோச லக்ஷண மாகிய சங்கற்ப, விகற்பாதி விகாரங்களும், விஞ்ஞா னமயகோச லக்ஷணமான கர்த்ருத் வாதி விகாரங்க ளும், ஆனந்தமயகோச லக்ஷணமாகிய போக்திருத் வாதி விகாரங்களும் சாக்ஷியாய் விளங்கும் ஆத்மா வைப் பற்று. ஆனால் பசு, கன்று, முதலிய பொருள் கள் சேர்க்கை பற்றிருக்கின்றனவே யெனின், ஜலம் உஷ்ணம் இரண்டும் கலந்திருந்த போதிலும் கைக ளாற் றொட்டு அவைகளைப் பிரித்தறிவது போலும், சுவரின்மீது எழுதப்பட்ட சித்திரங்கள் சுவரோடு சேர்ந்தொன்றாய்த் தோன்றிடினும் புத்தியினால் ஊகித் துணர்வது போலும் ஆத்மாவையும் பஞ்சகோசங் களையும் பகுத்தறிதல் வேண்டும் என்க.

ஆதலின் சத்துக்கள் ஆத்ம சொரூபத்தையடைய முயன்றால் அது எதாவது ஓர்நாள் பலனைத்தரு மென்பது பொய்யன்று. நாம் இச் சென்மத்தை வீணேபல விவகாரங்களிலும் உழன்று முற்றுறச் செய்வதைவிடச் சிறிது சிறிதாய் ஆத்ம சொரூபத்தை யடைய முயற்சிப்பதே மேலான கைங்கரியமாகின் றது. பாம்பின்வாயில் அகப்பட்ட தவளைபோல நாம் மாயையின் வாயில் அகப்பட்டுக்கொண்டு தவிக்கி

றோம். இவ்வுண்மை தெரிந்திருந்தும் உலகம் பல விதமா யூசலாடுகிறது. ஈசன் கருணுகடாக்ஷமும் நம் விடாமுயற்சியும் ஒன்று சேருமாயின் நாம் அழி யாப்பதவியை யுடைவது திண்ணம்.

---

## சச்சிதானந்த இலக்கணம்.

கருணை நிரம்பிய கடவுள் சீவர்கள் பத்தியடை யுமாறு பற்பல தத்துவங்களை வெளியிட்டிருக்கிருர். அன்றியும் பலனைக் கோராது புண்ணியகர்மம் புரிந் துளாரையும், சிறிது கர்மசேஷம் தங்கப் பெற்றவர் களையும் தீ நெறிக்கட் செல்லாது தடுத்தாட் கொள் ளுகிருர். எவ்வழிகளில் ஜீவர்கள் சுகமடைவார் களோ அவ்வழிகளி லெல்லாம் கடவுள் அவர்கட் குதவி செய்கின்ருர். அக்கடவுள் காட்டிய வழிகளில் பழகினுற் பயனுண்டேயன்றி நாம் வீணேகாலம் போக்குவதனுல் ஒன்றுமில்லை. தன்னைத் தான் உணர்ந்தவனே மேலானவனுவான்.

“ வாராயென் மகனே தன்னை
மறந்தவன் பிறந்திறந்து
தீராத சுழற்காற்றுற்ற
செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்
போாத கால நேமி
பிரமைபிற் றிரிவன் போதம்

ஆராயுந் தன்னைத் தானென்
றறியுமவ் வளவும் தானே" (கைவல்லியம்),

என்பது கவனிக்கத்தக்கது.

பிரத்திய கான்மாவைச் சாட்சாத் கரித்தவர்கட்குப் பிறப்பென்னும் பிணி சேராது என்பது திண்ணம்.

அப்பேர்க்கொத்த நிலையடைவதற்கு விடாமுயற்சியே வேண்டற்பாலது. உலகத்தில் பாதிக்கப்பட்டவர்கள் போல் வாழ்ந்தாலும் ஞானிகள் பற்றுக்கொண்டிரார். தாமரை இலையும் நீரும்போல் வாழ்பவர்களாதலால் உலகத்தோடு உண்மையில் அவர்கட்குச் சற்றேனும் பற்றிராது. உலகத்தைச் சொப்பனம்போல் நினைக்கிறவர்கள் ஞானிகளாவார்கள்.

இதனை,

"..............காண்ப வெல்லாம்
சொற்பனம் போலு மென்றே துணிந்தவன்
ஞானியாவான்" (கைவல்லியம்)

என்பதனுற் றெரிந்துகொள்க.

ஆத்மாவை உணர்ந்த பெரியோர்கட்கு உலகம் திரணமேயாம். ஆத்மா சச்சிதானந்த சொரூபியாகும். எவ்வத்து எதனுலும் பாதிக்கப் படாது முக்காலத்தும் ஏகரூபமா யிலங்குகின்றதோ அதுவே சத்து ரூபமாகும். எவ்வத்து சுயம்பிரகாச முடைத்தாய்த் தான்வேறு பிரகாசத் தைவிரும்பாது யாவற்

றையும் பிரகாசிக்கச் செய்கிறதோ அதுவே சித்து ரூபம். எவ்வஸ்து துக்கமற்றதோ அதுவே ஆனந்த ரூபம். இச்சச்சிதானங்கள் சிவத்துக்கும் உரியன.

"சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்த சிவமே" (தாயுமானவர்)

என்பதால் அவ்வுண்மையறிக.

---

## ஆவரண விட்சேப சக்திகள்.

ஆவரணம் விட்சேபம் எனச்சக்திகள் இரண்டு. அவற்றுள் ஆவரணம் ஞானிகளல்லாத பாமரரின் ஞானதிருஷ்டி குருடாம்படி கார்காலத் திரவி லுண்டாம் இருள் போன் மறைக்குந் தன்மையை உடைத்து என்று அறிஞர் கூறுவர். இவ்வாவரண சக்தியே மாறுத ஜனனத்தை உண்டாக்கும்.

இதனை,

"ஊன்றிய பவவியாதி யுண்டாக்கு முபாதியீதே"
என்பதனுலறிக. (கைவல்லியம்)

ஆவரணமே ஜீவர்கள் முத்தி சேராவண்ணம் பெருந்தடையாயிருக்கிறது.

"கொழுத்தவா வரணமுத்தி
கூடாமற் கெடுத்த கேடே" (கைவல்லியம்)

என்பதனுல் அதன் உண்மை யறிக.

விட்சேப சக்தியுந் துன்பம் நிறைந்த ஜனனத்திற்குக் காரணமாயிருப்பினும் சிறந்த விவேகிகட்கு குரு, சாஸ்திராதி ரூபமாய் உதவியாகும். விட்சேப சக்தியானது எப்பொழுதேனும் மோக்ஷத்தில் சேர்ப்பிக்கும் எனவே இவ்விரு சக்திகளுக்குள் ஆவரண சக்தியே மிகவுந் துன்பத்தைக் கொடுக்குந் தன்மையதாம்.

---

## அந்தக்கரண விருத்தி.

தாமதமும், இராசதமும், சாத்துவிதமும் ஆகிய முக்குணங்களால் அந்தக் கரணத்தின் கண்ணுண்டாகா நிற்கும் விருத்திகளும் மூவகையா யிருக்கும். அவையாவன, மூடவிருத்தி, கோரவிருத்தி, சாந்த விருத்தி என்பனவாம். மயக்கம், கலக்கம், பயம் முதலியவை உண்டாதற்குக் காரணம் மூடவிருத்தியாம். காமக்குரோத, லோப முதலானவை உண்டாவதற்குக் காரணம் கோரவிருத்தி. வைராக்கியம், பொறுமை, உத்தார முதலியவை உண்டாதல் சாந்த விருத்தி. இவ்விருத்தி பேதத்தால் ஆத்மாவின் சச்சிதானந்தங்களும் பேதமாம். கோர மூடவிருத்திகளில் சுகானுபவ முண்டாவதில்லை. சாந்த விருத்தியில் சுகானுபவம் உண்டாதல் யாவரு மறிந்ததே.

---

## ஜீவன் முக்தர்களின் பேதம்.

மனத்தின்கண்ணுள்ள எல்லா வாசனைகளையும் விட்டு உலகத்திற் பற்றில்லாமல் அசையாநிலை யெய்தியோர் சீவன் முக்தராவார்கள்.

"உளத்தினி லனைத்து மாற்றி
யுலகிலோர் பற்ற தின்றித்
துளக்கிலா நிலையினின்றோர்
துகளறு முத்தராவர்" (ஞானவாசிட்டம்)

இச்சீவன் முத்தர்கள் நால்வகையா யிருப்பார்கள். அவர்கள் முறையே பிரம்ம வித்து, வரன், வரியான், வரிட்டன் எனப்படுவர்.

தீரமுடையவர்களாய்ப் பிரம்ம ஞானிகளாக இலங்குவோர் பிரம்மவித்துக்களாவர். அவர்கள் எல்லாப்பற்றுக்களையும் ஒழித்தவர்களாயினும் உலகத்திற்கு வேண்டி வருணாச்சிரம விதிகளைச் செய்வார்கள். எனினும் தாமரையிலையின்கண் நீர்போலு முலகத்திற் பற்றின்றியே யிருப்பர். இந்திரியங்களை அகமுகமாகத்திருப்பிப் பரமான்மாவைச் சாட்சாத்கரித்துக் கொண்டிருக்குந் திறனுடையோராகலின் கலக்க முதலியன ஒழிந்திருப்பார்கள். தமது வன்மைகளை வெளியே காட்டார்கள். எல்லா மறிந்தவர்களாயிருந்தும் அறியாதவர்களைப்போல் இருப்பர். காமக்குரோதாதிகள் எழுமாயின் தமது வைராக்கிய

சிந்தையாலும் சுத்தவாதனையாலும் அவற்றை அண்ட விடாமல் காத்துக் கொண்டிருப்பார்கள். அத்தகைய ஜீவன் முத்தர்கள் எத்தொழிலையுஞ் செய்வார்கள் தவஞ்செய்பினுஞ் செய்வார்கள், வியாபாரத் தொழிலையுஞ் செய்வார்கள், உலகத்தைக்காக்கவுஞ் செய்வார்கள், பிச்சை புகுந்தும் வேண்டுமாயின் உண்பார்கள். மானவமானத்தை யவர்கள் கருத்தில் வையார்கள்.

" மாதவஞ்செயினுஞ் செய்வார்
வாணிபஞ்செயினும் செய்வார்
பூதலம் புரப்பாரையம்
புகுந்துண்பார் சீவன் முத்தர் "

(கைவல்லியம்)

நடந்த காரியங்களைப்பற்றி நினையார்கள். மேல் விளைவதையுஞ் சிந்திக்கமாட்டார்கள். கண் முன் னிற்கும் போகத்தைப் புசிப்பார்கள்.

" சென்றது கருதார் நாளைச்
சேர்வது நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் * * "

(கைவல்லியம்)

அன்றியும் ஒன்றை நன்றென்று புகழார்கள். மற்றொன்றைத் தீதென்று இகழார்கள்.

ஏனைய மூவரில் வரனும் வரியானும் ஆகிய இருவரும் சமாதியோகத்தில் இருப்பார்கள். பிட்சை

முதலியவற்றின் பொருட்டுத் தானுயுன்னுவோன் வரனாகும். சீடர் முதலியோராலுணர்பவன் வரியானுவான். அன்னியராலும் தன்னாலும் உணராதவன் வரிட்டனாகும். இவ்வாறு ஜீவன் முத்தர்களின் பேதஞ் சொல்லப்பட்டது.

உலகத்தில் மானிடராய்ப் பிறந்தோர் யாவரும் ஜீவன்முத்திப்பதத்தை யடைய முயலவேண்டும். அவ்வாறு முயலாவிடின் சென்மங்களினால் வருந்துன்பம் நிச்சயமாயொழியாது. எப்பொழுதும் பகவத் சொரூபத்தில் மனதை நிறுத்திப்பழகவேண்டும். குளவியானது ஓர் புழுவையெடுத்துத் தன் கூட்டில் வைத்து ரீங்காரஞ் செய்து கொண்டிருப்பதனால் அக்கீடம் பயத்தினால் குளவியின் மீதே மனத்தை நிறுத்திக் கடைசியில் அதன் ரூபத்தையே அடைந்து விடுகிறது. அஃதேபோல் பயத்தினாலோ சினேகத்தினாலோ ஒருவன் எந்தப்பொருளிலேனும் மனதைத் திடமாய் நிறுத்துவானானால் அவன் நிச்சயமாய் அப்பொருளின் ரூபத்தை யடைவான். ஆகலின் நாம் பகவத் சொரூபத்தில் மனதை நிறுத்தித் தியானஞ் செய்து நற்பதமடைய முயலுவோமாக.

முற்றுப்பெற்றது.

---



...SBY & CO., MADRAS.